# இன்றையச் சூழலில் இவரது கருத்துக்கள்



# கல்கி

KALKI
9-12-84
ரு-450

**இலவசம்**

பளபளக்கும் ஸ்டெய்ன்லெஸ்
ஸ்டீல் கிண்ணம்

*புதிய*

# பால் அடங்கிய
# ஃபாரெக்ஸ்
# திட உணவு

இரண்டு டின்கள் வாங்கும்போது

புதிய ஃபாரெக்ஸ் அதிக சுவையானது
புதிய ஃபாரெக்ஸ் அதிக முழுமையானது

நீங்கள் பாசத்துடன் ஊட்டும் ஒவ்வொரு கவளமும்
உங்கள் பாப்பாவின் வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.




இவ்வாய்ப்பு தேர்ந்தெடுத்த சில ஊர்களில் மட்டும்
விசேஷ டின்களின்மீது ஸ்டாக் உள்ளவரை வழங்கப்படும்.

உடல் நலத்தின் உறைவிடம்—க்ளாக்ஸோ

CLARION/B/GX/5/203 TML



○ தமிழ்ப்பித்தன்



○ ஸ்ரீ. சாயபு மரைக்காயர்







○ நாகை மனோகரன்



○ கொ. மா. கோதண்டம்

''குழந்தை எழுத்தாளர் சங்க விழாவிலே நான் முதன் முறையாக என் புத்தகத்தை வெளியிட வந்தபோது என் மனைவியைப் பேறுகாலத்துக்கு மருத்துவ மனைக்கு அனுப்பி விட்டு வந்தேன்... இரண்டாவது முறையாக ஏ. வி. எம். வெள்ளிப் பதக்கத்தைப் பெற்றபோது என் மனைவி இரண்டாவது குழந்தையைப் பெற்றெடுத்தாள்! இரட்டிப்பு மகிழ்ச்சி அன்று. இப்போது மூன்றாவது தடவையாகத் தங்கப் பதக்கமே வாங்க வந்திருக்கிறேன். இப்போதும் நிலைமை முன்போலவேதான்!'' என்று கூறி அவையில் கலகலப்பை ஏற்படுத்திய சாயபு மரைக்காயர் ''இத்துடன் நான் நின்றுவிடப் போவதில்லை'' என்றபோது குபீர் சிரிப்பு எழுந்தது. ''மனைவியை மருத்துவ மனைக்கு மறுபடி அனுப்புவதாயில்லை'' என்றதும் கூட்டத்தில் ஒரு நண்பர், ''வீட்டிலேயே பிரசவம் பார்ப்பதாய் உத்தேசமா?'' என்றார்! நல்லவேளையாக சாயபு மரைக்காயர், ''இல்லை. இனி நிறையக் குழந்தை இலக்கியப் படைப்புக்களை மட்டுமே உருவாக்கப் போகிறேன்'' என்று சொல்லிக் கவலையைப் போக்கினார்.

குழந்தை எழுத்தாளர் சங்க விழா இந்த ஆண்டு சிலம்புச் செல்வர் ம. பொ. சி.யும் நீதிபதி இஸ்மாயிலும் அவ்வை நடராஜனும் கலந்துகொண்டு பேருரைகள் நிகழ்த்த சிறப்பாக நடந்தேறியது. பரிசு பெற்ற நால்வரும் பேசியபோது குழந்தை எழுத்தாளரிடையே ஓர் உரையாடல் போல் கலகலப்பாகவும் ரசமாகவும் இருந்தது.

''பாரதிதாசன் வாழ்விலே....'' என்னும் வாழ்க்கை வரலாற்று நூல் எழுதித் தங்கப் பதக்கம் பெற்ற புதுவைப் பேராசிரியர் சாயபு மரைக்காயரை அடுத்து, ராஜாராம் மோகன்ராய் வாழ்க்கை வரலாறு எழுதி வெள்ளிப் பதக்கம் பெற்ற நாகை மனோகரன் தன்னம்பிக்கையோடு சொன்னார்: ''நான் குழந்தைக் கவிஞரை ஆதர்ச வழிகாட்டியாகக் கொண்டவன். வெகு சீக்கிரமே நான் புகழ் பெற்ற கவிஞனாகச் சுடர் விட்டுப் பிரகாசிப்பேன்!''

''மழைத் துளிகள்'' என்ற கவிதை நூலுக்குத் தங்கப் பதக்கம் பெற்ற கொ. மா. கோதண்டம் பேசினார்: ''ராஜபாளையம் எழுத்தாளர்களாகிய நாங்கள் ஒரு முறை பாரதப் பிரதமர் இந்திரா காந்தியைச் சந்தித்தோம். அப்போது அங்கு கூடியிருந்த குழந்தைகளைப் பார்த்து அவர் சொன்னார்: ''நீங்கள் பல்வேறு வர்ணங்களில் உடை உடுத்தியிருக்கிறீர்கள். அதே போல் பாரதம் பல்வேறு மொழி கலாச்சாரங்களைக் கொண்டது. நீங்கள் எல்லோரும் இங்கு ஒற்றுமையாக ஒன்று கூடியிருக்கிறீர்கள் அதுபோல் பாரதமும் ஒன்றுபட்டு வாழ்ந்து உயர வேண்டும்'' இப்படிக் குழந்தைகளிடம் பேசிவிட்டு எழுத்தாளர்களாகிய எங்கள் பக்கம் திரும்பி, ''என்னென்ன எழுதியிருக்கிறீர்கள்?'' என்று விசாரித்தார். சொன்னோம். ''இதெல்லாம் போதாது; குழந்தைகளுக்காக ஒருமைப்பாடு உணர்வை எழுத வேண்டும்'' என்றார். அந்த ஆணைதான் மழைத்துளிகள் என்ற கவிதைகளாக உருப்பெற்றுள்ளது!''

''வாழைத் தோட்டம்'' என்ற கவிதை நூலுக்காக வெள்ளிப் பதக்கம் பெற்றவர் தமிழ்ப் பித்தன். தமிழரசுப் பத்திரிகையின் உதவி ஆசிரியர். பெரியவர்களுக்கான கவிதைகளையே இதுவரை எழுதி வந்தவர். ஒரு நாள் இவர் எழுதிக் கொண்டிருக்கும் போது, பேத்தி அருகில் வந்து, ''பாட்டையா (வட்டார வழக்கு — தாத்தா என்பது பொருள்) என்ன எழுதுறே?'' என்றாள். ''கவிதை எழுதறேன்'' என்றார் தமிழ்ப் பித்தன். ''பாட்டையா, எனக்கும் ஒரு கவிதை எழுதித் தாயேன்!'' என்றாள் பேத்தி! இதன் விளைவாக உருவாயிற்று 'வாழைத் தோட்டம்!' —பி. எஸ். எம்.

## கேட்டோம்; சொல்கிறோம்



அதிரடி முதல்

○ கே. ஏ. கே.—இந்த முறை சற்று கஷ்டம்தான்

தேர்தல் பற்றி அறிவிப்பு வந்தவுடன் எல்லோரும் ஒருமித்த குரலில் சொன்னது: அனுதாப அலையிலேயே இந்திரா காங்கிரஸ் வெற்றி பெற்றுவிடும். ஆனால் இன்று என்ன நிலைமை? மூக்கணாங்கயிறு அறுந்த மாடுகள் போல் இ. காங்கிரஸ் கோஷ்டிகள் கட்சிக் கட்டுப்பாட்டை அறுத்துக்கொண்டு களத்தில் நிற்கின்றன. என்னதான் இந்திரா மீது மக்களுக்கு அனுதாபம் இருந்தாலும், அதை ஓட்டுக்களாக மாற்றுவதற்குக் கீழ் மட்டத்தில் உள்ள தொண்டர்களின் துணை இருந்தால்தான் முடியும். இதைப் புரிந்துகொள்ள முடியாத, அல்லது புரிந்துகொண்டே பேசாமல் இருக்கிற காங்கிரஸ் தலைமை, தேர்தலின்போது சரியான படிப்பினையைப் பெறப் போகிறது என்று அரசியல் நோக்கர்கள் கூறுகிறார்கள்.

வட இந்தியாவைப் பொறுத்தவரை என்னதான் உட்பூசல் இருந்தாலும், எதிர்க் கட்சிகளின் ஒற்றுமை யின்மையே காங்கிரஸுக்குப் பெரிய பலம். சரண்சிங்கின் பிடிவாதப் போக்கினால், பீகார், உத்தரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம் போன்ற மாநிலங்களில் ஜனதா, பி.ஜே.பி. சரண்சிங் கட்சி ஆகியவை ஒரு சரியான உடன்பாட்டுக்கு வரமுடியவில்லை. எதிர்க் கட்சிகளின் இந்தநிலை காங்கிரஸுக்கு ஒரு வரப்பிரசாதம். மேற்கண்ட மாநிலங்களில்தான் 25 சதவீதத்துக்கு மேற்பட்ட நாடாளு மன்றத் தொகுதிகள் உள்ளன.

மகாராஷ்டிரா, குஜராத் போன்ற மாநிலங்களில் காங்கிரஸ் கோஷ்டிகள் அதிகாரபூர்வமான காங்கிரஸ் வேட்பாளர்களைத் தோற்கடிப்பதில் இறங்கியுள்ளன. அந்துலே என்னதான் ஊழல் செய்திருந்தாலும் அவருக்கென்று ஒரு கும்பல் மகாராஷ்டிராவில் இருக்கிறது. அதேபோல் ஒரிஸ்ஸாவில் ராமசந்திர ரத் போன்றவர்கள் காங்கிரஸிலிருந்து விலகியிருப்பதால் அங்கும் காங்கிரஸ் கடுமையாக உழைக்க வேண்டியிருக்கிறது.

ஆந்திராவையும் கர்நாடகத்தையும் பொறுத்த மட்டில் இந்திரா இறப்பதற்கு முன்னமே கைகழுவி விட்ட இடங்கள். இப்போது அங்கு காங்கிரஸ் வெற்றி பெற வேண்டுமென்றால் அனுதாப அலைஒன்றுதான் உதவ வேண்டும். ஆனால் இங்கே தெலுங்கு தேசமும், ஜனதாக் கட்சியும் மற்ற எதிர்க் கட்சிகளோடு ஒரு சரியான உடன்பாட்டுக்கு வந்து ஒற்றுமையாகக் களத்தில் நிற்கின்றன. கேரளாவையும், மே. வங்கத்தையும் பொறுத்த மட்டில் இ. காங்கிரஸும் இடதுசாரிக் கட்சிகளும் சரிபாதி இடங்களைப் பிடிப்பதற்கான வாய்ப்பு இருக்கிறது. பஞ்சாபிலும் அஸ்ஸாமிலும் தேர்தல் நடந்திருந்தால் இ. காங்கிரஸ் பலத்த அடி வாங்கியிருக்கும். அதனால்தான் நடத்தாமல் விட்டார்களோ!

**ஆயிரத்தெட்டுக் கோஷ்டிகள்**

அப்புறம் தமிழ்நாடு! இங்கு ஏற்கனவே ஆயிரத்தெட்டுக் கோஷ்டிகள், தேர்தலில் வேட்பாளர்களைத் தேர்ந்தெடுக்கும்போது மோதல் வரும் என்று ஏற்கனவே எதிர்பார்க்கப்பட்டது. அது நடந்தே விட்டது.

''இது அன்னை (இந்திராவின்) காங்கிரஸ் இல்லை; பண்ணை (மூப்பனார்) காங்கிரஸ்'' என்று சாடுகிறார் அகில இந்திய சிவாஜி ரசிகர் மன்ற செயலாளர் ராஜசேகரன். இந்த நிருபருடன் பேசும்போது அவர் மேலும் சொன்னது: ''தொகுதி பங்கீட்டின்போது காங்கிரஸுக்கு என்று வாய்ப்புள்ள தொகுதிகளை அ. இ. மு. க. வுக்கு விட்டுக்கொடுத்து

தேர்தல் கண்ணோட்டம்

# ஆண்டிப்பட்டி வரை




விட்டார்கள். ஒரு பாராளு மன்றத் தொகுதியில், இரண்டு சட்ட மன்ற தொகுதிகளிலாவது காங்கிரஸ் போட்டியிட வேண்டும் என்பது எங்கள் அண்ணன் சிவாஜியின் வேண்டுகோள். ஆனால் பெரியார் மாவட்டத்தில் ஒரே ஒரு சட்ட மன்றத் தொகுதியில் மட்டும்தான் காங்கிரஸ் போட்டியிடுகிறது. போதாக் குறைக்கு வேட்பாளர் தேர்ந்தெடுப்பதிலும் ஆயிரத்தெட்டு பாரபட்சங்கள். நேற்று கட்சியில் சேர்ந்தவர் வைஜயந்திமாலா. காங்கிரஸில் ஆட்களா இல்லை. தேர்தலின்போது கொடி கட்டுவதற்கும், உதைபடுவதற்கும் சிவாஜி ரசிகர்கள்; டிக்கட் மட்டும் மூப்பனாரின் ஆட்களுக்கு என்றால் அது தன்மானப் பிரச்னையாகிவிடுகிறது. இன்று தமிழ் நாட்டில் 72 சட்ட மன்றத் தொகுதிகள் இ. காங்கிரசுக்கு ஒதுக்கப்பட்டுள்ளன. இதில் 55 இடங்களில் மூப்பனாரின் ஆட்கள் போட்டியிடுகிறார்கள். அதே போல் 26 பாராளு மன்றத் தொகுதிகளில் 18 தொகுதிகளில் மூப்பனாரின் ஆட்கள் போட்டியிடுகின்றனர். இந்தப் பண்ணை (மூப்பனார்) காங்கிரஸ் நடத்தும் அட்டகாசத்தை ஒழித்துக் கட்டினால்தான் காங்கிரஸ் உருப்படும்.''

இதற்கு மறுபுறமாக மூப்பனார் கோஷ்டியைச் சேர்ந்த வலக்கரம் ஒருவர், ''இன்று பிரிந்து போகிற சிவாஜியே, நாளை மறுபடி இன்கம்டாக்ஸ் தொல்லை என்றால் ''ராஜீவ் வாழ்க''என்று கோஷித்துக்கொண்டு திரும்பி வந்தால் வியப்பதற்கில்லை'' என்று கூறியது வேடிக்கையாக இருந்தது. இ. காங்கிரஸில் சேர்பவர்களுக்கு இன்கம்டாக்ஸ் தொல்லையிலிருந்து பாதுகாப்புக் கிட்டும் என்று அவர்களே ஒப்புக்கொள்வது போலிருந்தது!

○ வைஜயந்திமாலா—அனுதாப அலை வெற்றியைத் தேடித் தருமா?

○ உற்சாக நிலையில் தி. மு. க.

மன்றத்துப் பிள்ளைகளின் கட்டாயத்தின் பேரில் காங்கிரஸிலிருந்து விலகிய சிவாஜி பிரதமரைச் சந்தித்த பின் மறுபடி இணைந்திருக்கிறார். என்றாலும் ரசிகர் மன்றத்தில் நிலவிய அதிருப்தியும் புரட்சியும் அடியோடு மறைந்து விட்டதாய்க் கருத முடியாது. முழுமூச்சுடன் தேர்தல் பணியாற்றுவார்களா என்பது சந்தேகமே.

இ. காங்கிரஸின் நிலைதான் இப்படி இருக்கிறதே என்று பார்த்தால் கிட்டத்தட்ட அதே அளவுக்குக் கோஷ்டி பூசலில் சிதறுண்டு கிடக்கிறது அ. தி. மு. க. ஏற்கெனவே எஸ். டி. எஸ். தனியாகப் பிரிந்து சென்றதன் மூலம் சில பகுதிகளில் செல்வாக்கை இழந்திருக்க அ. தி. மு. க. இப்போது, எஸ். எஸ். ஆர்., எம். ஜி. ஆர். மன்றங்களின் போக்கினால் மேலும் பலவீனப்பட்டுப் போயிருக்கிறது.



## ஜெயலலிதா நிலை

ஜெயலலிதாவும் திருநாவுக்கரசும் தனியாக ஒதுங்கி விட்டார்கள். அவர்களின் கோஷ்டி நாளடைவில் இ. கா.வில் ஒரு அங்கமாகிவிடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. வீரப்பன் முசிறிப்புத்தன் கோஷ்டிக்குத்தான் பெரும்பான்மையான இடங்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. ஜெயலலிதா ஆதரவாளர்கள் பலருக்கு ஸீட் மறுக்கப்பட்டிருக்கிறது. ஜெயலலிதாவின் செல்வாக்கு ஓங்கியிருந்தபோது மதிப்பிழந்திருந்த ப.வு.ச. இன்று மீண்டும் பலம் பெற்றிருக்கிறார். அவரது ஆட்கள் பலரும் அ. தி. மு. க.. லிஸ்டில் இடம் பெற்றிருக்கிறார்கள். திரு விஸ்வநாதன் என்ற வட ஆர்க்காடு எம். எல். ஏ. மக்களிடமும் எம். ஜி. ஆரிடமும் நல்ல பெயர் பெற்றவர். இந்த முறை வேலூர் தொகுதியில் போட்டியிட மனு செய்திருந்தார். ஆனால் அவருக்கு டிக்கெட் கொடுக்கப்படவில்லை ப. வு. சண்முகத்துக்கு வேண்டியவரான ஏ. சி. சண்முகம் என்பவருக்கு இந்த ஸீட் தரப்பட்டிருக்கிறது. இதேபோல் பல தொகுதிகள். எஸ்.டி.எஸ். எஸ். எஸ். ஆர். ஆட்கள் தவிர டிக்கெட்டுகள் கிடைக்காத முன்னாள் எம். எல். ஏகள் அ. தி. மு. க. வின் வெற்றி வாய்ப்புகளைப் பெருமளவு பாதிப்பார்கள் என்பது நிச்சயம்.

## உற்சாக அலை

தி. மு. க. இப்போது கன ஜோராகக் களத்தில் நிற்கிறது. காங்கிரஸ் உட்கட்சிப் பூசலும், அ.தி.மு.கவின் கோஷ்டிச் சண்டைகளும் தி. மு. க. வுக்கு உற்சாகத்தை அளித்திருக்கின்றன. தி. மு. க.வைப் பொருத்த மட்டில் தலைவர் சொன்னதுதான் வேத வாக்கு. கோஷ்டிப் பூசல் என்பது அறவே இல்லை. ஜனதாவுடன் ஏற்பட்ட முறிவும் சீர்பட்டுவிட வாக்குகள் சிதற வாய்ப்பில்லையாதலால் முன்னிலும் உறுதியாக இருக்கிறது. எஸ்.டி.எஸ். கட்சியை உதறி விட்டதற்குக் காரணம் அதிக இடங்கள் கேட்கிறார் என்பது மட்டுமல்ல; அ. தி. மு. க. வோட்டுக்களைப் பிரிப்பதற்காகவும்தான்.

முதன் முறையாகச் சில நடிகர்கள் இ. கா.வின் சார்பில் தேர்தலில் நிற்கிறார்கள். அமிதாப்பச்சன், சுனில்தத், வைஜயந்திமாலா ஆகியோர்தான் அவர்கள்.

## அமேதி

ராஜீவின் செல்லத் தொகுதி. கடந்த நான்கு வருடங்களில் தொகுதியில் ஏராளமான வசதிகள் செய்து மக்களின் நன்மதிப்பைப்பெற்றுக்கொண்டிருக்கிறார் ராஜீவ். ஆனால் மாமியாரால் வீட்டை விட்டுத் துரத்தப்பட்ட (அல்லது தானாக வந்த) பெண்மணி என்ற அனுதாபம் மேனகாவுக்கு இருக்கிறது. மேலும் தொகுதியின் ஒவ்வொரு கிராமத்தையும் சென்று பார்த்தவர் மேனகா. அவருக்குக் கவனத்தைச் செலுத்த அந்த ஒரு தொகுதிதான். ஆனால் ராஜீவ் தேசம் முழுவதற்கும் செல்ல வேண்டும். இந்திரா இறந்தபோது தனக்குச் சரியான மரியாதை கொடுக்காமல் ஒதுக்கி வைத்திருந்த நிலையை மேனகா சொல்லிக் கண்ணீர் விடுகிறார். மக்களும் அனுதாபம் காட்டுகிறார்கள். மேலும் ராஜீவைச் சுற்றி உள்ள பாதுகாப்பு வளையம் மக்களுக்கும் அவருக்கும் நேரடித் தொடர்பைப் பாதித்து விட்டிருக்கிறது. வேட்பாளர் மனுவைத் தாக்கல் செய்து விட்டு, தொகுதியில் மூன்று இடங்களில் பேசிய மேனகாவுக்கு எக்கச்சக்கமான கூட்டம் கூடியிருக்கிறது. இது ராஜீவின் ஆட்களிடம் ஓர் அதிர்ச்சியை ஏற்படுத்தியிருக்கிறது.

## பெங்களூர் வடக்கு

இங்கு ஜனதா தலைவர் ஜார்ஜ் பெர்னாண்டஸுடன் மோதுபவர் மத்திய மந்திரி ஜாபர் ஷெரிப். இரண்டு தேர்தல்களில் முசாபர்பூர் (பீகார்) தொகுதியில் போட்டியிட்டு வென்ற பெர்னாண்டஸ் தொகுதி மாறியிருக்கிறார். 'என் சொந்த மாநிலம் இது' என்று பெர்னாண்டஸ் சொன்னாலும் மிகவும் சாதகமான தொகுதி என்பதால் இங்கு நிற்கிறார். பீகாரில் எதிர்க் கட்சிகளுக்கிடையே சரியான உடன்பாடு வரவில்லை. சரண் சிங் கட்சியினர் அங்கு பலமாக இருக்கிறார்கள். அவர்களையும் காங்கிரஸையும் எதிர்ப்பது கஷ்டமே என்ற நிலையில்தான் பெங்களூருக்கு வந்திருக்கிறார் பெர்னாண்டஸ். தொழிலாளர்கள் நிறைந்த தொகுதியில் வேறு போட்டியிடுகிறார். ஹெக்டே இவர் வெற்றிபெற வேண்டும் என்று சபதம் எடுத்துக் கொண்டு வேலை செய்யப் போகிறாராம்.

## ஆயிரம் விளக்கு (சட்ட மன்றம்)

இங்கு அமைச்சர் கே. ஏ. கே.வை எதிர்த்து நிற்பவர் மு. க. ஸ்டாலின். அ. தி. மு. க. அமைச்சர்களிலேயே தைரியமாக சென்னையில் நிற்பவர் இந்த அமைச்சர்தான். ஏற்கெனவே இரண்டு முறை தேர்ந்தெடுக்கப்பட்டு, தொகுதி மக்களிடம் நல்ல பெயர் பெற்றிருப்பவர், கே. ஏ. கே. ஆனாலும் இந்த முறை அவரை எதிர்க்கப் போவது கலைஞர் மகன். ஏராளமான இளைஞர்கள் ஸ்டாலினுக்காக உழைத்திடக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். முஸ்லிம் லீக் கூட்டணியில் இருப்பதால் ஆயிரம் விளக்கில் உள்ள முஸ்லிம் வாக்குகள் ஸ்டாலினுக்குச் சென்றால் ஆச்சரியப்பட வேண்டியதில்லை. கடந்த தேர்தலில் 300க்கும் சற்று அதிகமான வாக்குகள் வித்தியாசத்தில்தான் கே. ஏ.கே. வெற்றி பெற்றார். கட்சி என்ற போர்வையை எடுத்துவிட்டு, தனிப்பட்ட முறையில் நின்றாலும் கே. ஏ. கே. வெற்றி பெறுவார் என்று

# ஒரே மாத்திரை
# வலி விரைவில் நீங்கிவிடும்



# ஸ்டாபேக்




தலைவலி, உடல் வலி, பல்வலி, கால்,
கை உளைச்சல் ஜுரம் முதலியவற்றிலிருந்து
சிறந்த நிவாரணம் அளிக்கிறது.

Adept-M/PP/101/84

அ.இ.மு.க.வினர் கூறினாலும் இந்த முறை மு. க. ஸ்டாலின் அவருக்குச் சவாலாகவே விளங்குவார்.

### ஆத்தூர் (சட்ட மன்றம்)

கடந்த தேர்தலில் திருநெல்வேலியில் தேர்ந்தெடுக்கப்பட்ட நெடுஞ்செழியன் இந்த முறை மதுரை மாவட்டம் ஆத்தூரில் நிற்கிறார். தமிழக அமைச்சர்களில் யாரும் தொகுதியை மாற்றி நிற்காத நிலையில் இவர் மட்டும் இப்படித் தொகுதி மாறும் காரணம்? முதல்வரின் தொகுதியான ஆண்டிப்பட்டி தொகுதியை அடுத்து தம் தொகுதி இருப்பதால் இரண்டையும் கவனித்துக் கொள்ள வசதியாக இருக்கும் என்று சொல்கிறார் நெடுஞ்செழியன். ஆனால் இது சரியல்ல. ஆத்தூர் பாரம்பரியமாக காங்கிரஸ் வேட்பாளர்களையே தேர்ந்தெடுக்கிறது. ஆகலால் சாதகமான தொகுதி என்பதால்தான் ஆத்தூருக்கு வந்திருக்கிறார். இவரை எதிர்த்து தி. மு. க. வும் எஸ். டி. எஸ். கட்சியும் போட்டியிடுகின்றன. நிச்சயம் இந்தத் தொகுதியில் வெற்றி பெறும் வாய்ப்பு நெடுஞ்செழியனுக்கு இருக்கிறது.

### ஆண்டிப்பட்டி

முதல்வர் போட்டியிடும் தொகுதி. முதல்வரை எதிர்த்து வேட்பாளரை நிறுத்த மாட்டோம் என்று இந்தத் தொகுதியை தி.மு.க. கூட்டணிக் கட்சியான பார்வர்டு பிளாக்குக்குக் கொடுத்திருக்கிறது. வல்லரசு என்பவர் இங்கு சிங்கம் சின்னத்தில் நிற்கிறார். அமேதி தொகுதியை ராஜீவ் எப்படிக் கவனித்துக் கொண்டாரோ அதேபோல் ஆண்டிப்பட்டியையும் முதல்வர் கவனித்துக் கொண்டார். ஆண்டிப்பட்டியில்தான் போட்டியிடுவேன் என்று ஏற்கெனவே முதல்வர் கூறியிருக்கிறார். எம். ஜி. ஆரின் உடல்நிலையை வைத்து நடத்தப்படும் பிரசாரத்தால் இந்தத் தொகுதியில் எதிர்க் கட்சிகள் இருக்கும் இடம் தெரியாமல் போகப் போகின்றன. பார்வர்டு பிளாக் வேட்பாளர் கண்ணியமாக வாபஸ் பெற்றால் எதிர்க் கட்சிகளுக்குக் கௌரவம் கூட்டுவது உறுதி. இந்தச் செயல் மற்ற தொகுதிகளில் எதிர்க் கட்சிகளுக்கு ஆதரவைத் தேடித் தரக்கூடும்.

சரண்சிங் (பக்பட்) வாஜ்பேயி (குவாலியர்) ஜெகஜீவன்ராம் (சாராம்) சந்திரசேகர் (பல்லியா) ஆகியோர் வழக்கமாக அவர்கள் வெற்றி பெறும் தொகுதிகளிலேயே நிற்கிறார்கள். சுலபமாகவும் வெற்றி பெறுவார்கள். ராம்ஜெத் மலானி, செழியன் போன்ற பாராளு மன்ற அனுபவமும் புத்திசாலித்தனமும் கொண்டவர்களை எதிர்த்து சுனில்தத், வைஜயந்தி மாலா ஆகியோர் நிற்கிறார்கள். இவர்கள் நிற்பது நகர்ப்புறப் பகுதிகள். சிந்தித்து ஓட்டுப்போடும் மக்கள். அனுதாப அலை எவ்வளவு தூரம் படித்த மக்களைத் தாக்கும் என்பதைச் சொல்வதற்கில்லை.

ஆந்திராவில் தெலுங்கு தேசத்துக்குப் பயந்துகொண்டு மத்திய மந்திரி நரசிம்மராவ் தொகுதி மாறி நிற்கிறார். சிவசங்கர் மறைந்த பிரதமர் தொகுதியான மேடக்கில் நிற்கிறார்.

### அலகாபாத்

சரண்சிங் கட்சியைச் சேர்ந்த பகுகுணா இங்கு நடிகர் அமிதாப்பை எதிர்த்து நிற்கிறார். கார்வால் என்ற தொகுதியைச் சேர்ந்த இவர் அலகாபாத்தில் நிற்பது ஒரு கடும் போட்டியை உருவாக்கியிருக்கிறது. பகுகுணா எங்கே தோற்றுப்போய்விடுவாரோ என்று என். டி. ஆர். ஆந்திரத்தில் ஏதாவது ஒரு தொகுதியில் போட்டியிடுமாறு பகுகுணாவை அழைத்திருக்கிறார். ஆனால் மனிதர் தைரியசாலிதான். 'அலகாபாத்தில்தான் நிற்பேன்' என்று பிடிவாதத்தோடு நிற்கிறார். அலகாபாத் பாரம்பரியமாக காங்கிரஸ் செல்வாக்கு மிருந்த இடம். நிற்பது நடிகர் அமிதாப்பச்சன். அனுதாப அலை வேறு! பகுகுணா இந்தத் தொகுதியில் வெற்றி பெற்றுவிட்டாரென்றால் இந்திய மக்களுக்குத் தெளிவு பிறந்து விட்டது என்றுசொல்லலாம்!

—நமது நிருபர்

படங்கள்: சுபா



# சிறிதே சாதுர்யம் தேவை, கேசம் பெறுகிறது இளமை!





வாழ்க்கையின் குறிப்பிட்ட ஒரு நேரத்தில் கேசம் நரைக்கத் துவங்குகிறது. இளமை அத்துடன் முடிவடைந்துவிட்டதாக நீங்களும் எண்ணி விடுகிறீர்கள். அது வெறும் பிரமைதான். சிறிதே சாதுர்யமாக செயல்பட்டால் இத்தகைய தவறான பிரமை விலகிவிடும்.

**கேள்வி:** கேசத்திற்கு ஹேர் டை எப்போது உபயோகிக்கத் துவங்கலாம்?

**பதில்** : கேசம் நரைப்பதற்கு குறிப்பிட்ட வயது என்று எதுவும் கிடையாது. ஆனால், நரைக்கும் அறிகுறி தோன்றியதுமே கேசத்துக்கு ஹேர் டை உபயோகிக்கலாம்.

**கேள்வி:** ஆனால் ஹேர் டை செய்வது என்பது பெரும் தொல்லையும், மிகுந்த நேரம் தேவைப்படும் விஷயமும் அன்றோ!

**பதில்** : நீங்கள் கண்டகண்ட ஹேர் டைகளை வாங்கி உபயோகித்தால் அப்படி நேரக்கூடும். ஆனால் கோத்ரெஜ் ஹேர் டை உபயோகிப்பது மிகவும் எளிது. காரணம் இது தானாகவே பரவி விடுகிறது.

**கேள்வி:** அடிக்கடி ஹேர் டை உபயோகித்தால் கேசத்திற்குக் கெடுதல் ஏற்படக்கூடுமா?

**பதில்** : உயர்ந்தரக ஹேர் டையாக இருந்தால் சிறிதும் கெடுதல் இல்லை. அதாவது, கோத்ரெஜ் ஹேர்டை கேசத்துக்குக் கருமை யூட்டுவது மட்டுமல்லாது, அதை அழகுறச் செய்து பளபளப்பும் அளிக்கிறது.

**கேள்வி:** கோத்ரெஜ் ஹேர் டையினால் துணிகள், தலையணைகள் இவற்றில் கறைகள் ஏற்படுகின்றனவா?

**பதில்** : கோத்ரெஜ் ஹேர் டையினால் அப்படி ஏற்படாது. காரணம், அது மற்ற ஹேர் டைகளைப்போல் கேசத்தின் மேற்பகுதியில் தங்கி விடாமல் கீழ்ப்பகுதிவரை ஊடுருவிச் செயல்புரிகிறது.

**கேள்வி:** கோத்ரெஜ் ஹேர் டை எவ்வளவு நாட்களுக்கு செயல் திறனை நீடித்து வைக்கின்றது?

**பதில்** : குறைந்த பட்சம் மூன்று-நான்கு வாரங்களுக்கு.

**கேள்வி:** கோத்ரெஜ் ஹேர் டையின் மூலம் கேசத்தை டை செய்தபின் வழக்கம்போல் தலையை அலசிக்கொள்ள முடியுமல்லவா?

**பதில்** : ஆம். கேசத்தை நல்ல ஷாம்பு போட்டு அலசவும். பிறகு அதன்மீது ஹேர் ஆயில் அல்லது க்ரீம் போட்டுக் கொள்ளலாம்.

**கேள்வி:** ஹேர் டையினால் ஒருவித துர்நாற்றம் வீசுகிறது என்கிறார்களே!

**பதில்** : வேறு ஹேர் டைகளைப் பொறுத்தவரை இவ்விதமாக இருக்கக்கூடும். ஆனால் கோத்ரெஜ் ஹேர் டையில் நல்ல நறுமணம் உண்டு. தவிர இதில் கண்டிஷனரும் உள்ளது.

**கேள்வி:** கோத்ரெஜ் ஹேர் டை பற்றி வேறு ஏதேனும் கூற முடியுமா?

**பதில்** : கோத்ரெஜ் லிக்விட் ஹேர் டை 20 மிலி மற்றும் 40 மிலி. பாட்டில்களில் கிடைக்கிறது. இரண்டு ஷேடுகளில், டார்க் ப்ரௌன் மற்றும் நேச்சுரல் ப்ளாக். உங்கள் கேசத்தின் இயற்கையான வண்ணத்துக்கேற்றதைத் தேர்ந்தெடுங்கள்.




Godrej

கோத்ரெஜ்
பர்மனென்ட் லிக்விட்
ஹேர்டை

தெரிந்தவர்களுக்கு மட்டுமல்ல
உபயோகிக்க விரும்பும் புதியவர்களுக்கும்

கோத்ரெஜ் தயாரிப்பு.

CLARION/B/GS/22/203 TML





1984 டிசம்பர் 9
மலர் : 43 இதழ் : 19
ரக்தாக்ஷி கார்த்திகை 24

கல்கி

சிந்தித்துச் செயல்படுவோம்—2

# ராஜீவ் கரத்தைப் பலப்படுத்த வேண்டுமா?

நேரு குடும்பத்தின் பாரம்பரியச் சொத்து அல்ல இந்தியா என்னும் போது கூடவே மற்றொரு கேள்வி எழுகிறது. இந்திராவின் மகன் என்பதாலேயே ராஜீவ் பிரதமராக வரக் கூடாது என்று கூறுவது நியாயமாகுமா? அப்படிச் சொல்வது கொஞ்சம் கூட நியாயமே இல்லைதான். வோட்டுரிமை பெற்ற யார் வேணுமானாலும் மக்களுடைய பேராதரவு கிட்டுமானால் பிரதமராக வரலாம் என்னும் போது ராஜீவ்காந்தி மறுபடி பிரதமராக வர முயல்வதில் எவ்விதத் தவறுமில்லை.

பிரச்சினை இதுவல்ல. ராஜீவ் சார்ந்துள்ள கட்சியும், அக்கட்சியின் பிரகடனப்படுத்தப்பட்ட, பரீட்சித்துப் பார்க்கப்பட்ட கொள்கைகளும் நாட்டுக்கு நலன் செய்தனவா என்பதே கேள்வி. அனுதாப அலை, ஸ்திரத்தன்மை போன்ற அடுத்த வாதங்களை ஒதுக்கிவிட்டு இந்தக் கேள்விக்கு 'நிச்சயமாக நலன் பயக்கும்' என்ற பதிலை நாம் கூற முடிந்தால் தாராளமாக இ. காங்கிரஸுக்கும் அதன் கூட்டணி கட்சிக்கும் நாம் வோட்டுப் போடலாம். ஆனால் அத்தகைய பதில் நமக்குக் கிடைக்கவில்லையே!

இடையில் இரு ஆண்டுகள் தவிர சுதந்திரம் பெற்றதிலிருந்து 37 ஆண்டுகள் காங்கிரஸ் ஆண்டிருக்கிறது. இந்திராகாந்தியே 16 ஆண்டுகள் பதவியில் இருந்து தமது ஜனநாயக சோஷலிஸக் கொள்கைகளைப் பரீட்சித்துப் பார்த்து விட்டார். ஏழைமை ஒழியக் காணோம்; லஞ்ச ஊழல் தொலையக் காணோம். தொழில் வர்த்தக பொருளாதாரத் துறைகளில் நாட்டின் முன்னேற்றம் நத்தை வேகத்தில் நடக்கிறது. நேற்று சுதந்திரம் பெற்ற நாடுகள், உலக யுத்தத்தில் அடியோடு அழிந்து தரைமட்டமான நாடுகள் ஓகோகோ என்று வளர்ச்சியுற்று எட்டாத உயரத்தில் நிற்கின்றன. நாம் இன்னமும் தாழ்வுற்று, வறுமை மிஞ்சி, அயல் நாடுகளுக்குக் கடன்பட்டு அடிமைகளாகிக் கிடக்கிறோம். சம்பளம், கிராக்கிப்படி கூடுகிறது; கூடவே விலைவாசி பன்மடங்கு உயர்ந்து அதைச் செல்லாக் காசாக்குகிறது. வேலையில்லாத் திண்டாட்டம் இளைஞர்களின் எதிர்காலத்தை இருண்மயமாக்குகிறது. நவீன சிந்தனையற்ற உளுத்துப் போன இந்தப் பழங்காலக் கொள்கைகளுக்கே இன்னும் ஓர் ஐந்தாண்டுப் பட்டா வழங்கப்பட்ட வேண்டுமா?

'ராஜீவ் இளைஞர், சுறுசுறுப்பானவர், நவீன சிந்தனைகள் உடையவர்; நாட்டை முன்னேற்றி விடுவார்; இப்போதுதானே பதவிக்கு வந்திருக்கிறார்? கொஞ்சம் அவகாசம் தரப்பட வேண்டாமா, அவர் தம் திறமையைக்காட்ட?' என்று நம்மை நாமே சமாதானப் படுத்திக்கொண்டு அவர் கட்சி வேட்பாளருக்கு வோட்டளிப்பது நம் தலையில் நாமே மண்ணை அள்ளிப்போட்டுக் கொள்வதாக முடியும். காரணம், பதவி ஏற்றபின் ராஜீவ் அளித்த விரிவான கொள்கை விளக்கத்தில் எந்தவிதமான மாறுதலையும் ஏற்றுக்கொள்ளப் போவதாகக் கோடி காட்டக் கூட இல்லை. அதே பழைய நமுத்த பட்டாசுக் கொள்கைதான். 'கொள்கை எப்படியானாலும் அதை அமல்படுத்துபவர் கெட்டிக்காரர்; எப்படியாவது அற்புதங்களைச் சாதித்து விடுவார்' என்று கருதுவது மூடத்தனம். ஒரு தனி மனிதரை நம்பி நாட்டின் எதிர்காலத்தை சூதாட்டப் பணயமாக்குவதற்கு ஒப்பானது. இப்போது பட்டா வழங்கி விட்டால் அடுத்த ஐந்தாண்டுக்குள் இந்நாட்டைப் பீடித்துள்ள நோய்கள் குணப்படுத்தவே முடியாத அளவு முற்றிவிடும்.

இந்தச் சூழலில் யாருக்கு நம் வோட்டு?

---

தமிழ்த்திரு நாதெள்ளைப் பெற்ற

நசிவென்று கும்மிடி பாப்பா—பாரதியார்

## நேருக்கு நேர்

# வேதாளத்திடமிருந்து தப்பிய குட்டிச்சாத்தான்



○ அசோக்குமார் (காமிராமேன்)

○ டேவிட் ஷேமியர்



ஜெயமன்மதனின் வேதாள விமர்சனத்திலிருந்து தப்பிவிட்டது குட்டிச்சாத்தான். விமர்சனத்துக்குக்குப் பதிலாக இதோ ஒரு பேட்டி.

இந்தியாவின் முதல் த்ரீ-டி படமான 'மை டியர் குட்டிச்சாத்தான்' படத்தின் டைரக்டர் 'ஜீஜோ' அவர்களைச் சந்தித்த போது:

நிருபர்: உங்களுக்கு முப்பரிமாணத்தில் ஒரு படம் எடுக்கிற ஐடியா எப்படி வந்தது?

ஜீஜோ: இந்தியாவின் முதல் 70 எம். எம். படம் (படயோட்டம்) எடுத்தவர்என் அப்பா அப்பச்சன். அதேபோல முதல் மலையாள சினிமாஸ்கோப் படம் (தச்சோளி அம்பு) எடுத்ததும் அவர் தான். எனக்கும் புதுமையாய் ஏதாவது செய்வதில் ஆர்வம். 3-டி படம் எடுத்தால் என்ன என்று தோன்றிற்று. ஹாலிவுட்டுக்குப்போய் டேவிட் ஷேமியர்என்கிறவரை ஒப்பந்தம் செய்து அழைத்து வந்தோம். மூன்று மாதப் படப்பிடிப்பு.

நிரு: சாதாரணப் படத்தை ஷூட் பண்ணுவதற்கும் இதற்கும் என்ன வித்தியாசம்?

ஜீஜோ: இரண்டுக்குமே படப்பிடிப்புக் காமிரா ஒன்றுதான். 3-டி படத்துக்கு காமிராவில் ஒரு ஸ்பெஷல் லென்ஸைப் பொருத்த வேண்டும். இன்னொரு விஷயம்: 3-டி ஷூட்டிங்கின்போது ஷாட்டில் இடம்பெறுகிற ஒவ்வொரு பொருளும், உருவமும் காமிராவிலிருந்து இத்தனை தூரத்தில் இருக்க வேண்டும் என்று கணக்குப் போடுவது இருக்கிறதே, அது ரொம்பச் சிக்கலானது. அதிலும் திரையிலிருந்து பார்வையாளர்களை நோக்கி வருவதாய் அமைக்கப்பட்ட காட்சிகளில் நாங்கள் ரொம்பவும் கஷ்டப்பட்டோம். சம்மட்டியால் மண் வெட்டுகிற காட்சியை மட்டும் சுமார் நூறு தடவை எடுத்திருப்போம். பிறகுதான் பர்ஃபெக்டாய் வந்தது.

நிரு: ஃபிலிமில் ஏதாவது வித்தியாசம் உண்டா?

ஜீஜோ: ம்... உண்டு. சாதாரண பிலிம் சுருளில் ஒரு ஃப்ரேமின் அளவைப பார்த்திருப்பீர்கள். ஆனால் 3-டி பிலிமில் ஒரே ஃப்ரேம் இரு பாதியாய் இருக்கும். மேல் பாதியில் உள்ளது வலது கண்ணுக்கு. கீழ்ப்பாதியில் இருப்பது இடது கண்ணுக்கு. இதனால்தான் நீளம், அகலம், ஆழம் என்கிற மூன்று பரிமாணத்தில் படம் தெரிகிறது. இந்தப் படத்தை ஸ்பெஷல் கண்ணாடி (போலரைஸ்டு கிளாஸ்) அணிந்துதான் பார்க்க வேண்டும். உண்மையில் இது கண்ணாடி இல்லை. தடித்த போலரைஸ்டு தான்.

நிரு: எப்படி சுத்தம் செய்கிறீர்கள்?

ஜீஜோ: ஒவ்வொரு காட்சி முடிந்ததும் கண்ணாடியைத் திரும்ப வாங்கிக் கொண்டு, அவை அத்தனையையும் ஒரு சிறு அறையில் போட்டு, 'ஆவி' (வேப்பர்)யைச் செலுத்தி, பின் ஒவ்வொன்றாய் எடுத்துச் சுத்தம் செய்து மீண்டும் தருவோம்.

நிரு: தியேட்டரில் சாதாரணப் படம் திரையிடப்படுவதற்கும் 3-டி படம் திரையிடப்படுவதற்கும் என்ன வேறுபாடு?

ஜீஜோ: முன்பு 3-டி படத்தைத் திரையிட தியேட்டரில் இரண்டு புரொஜக்டர்கள் இருக்கும். இரண்டிலும் ஃபிலிம் ஓடும். ஆனால் இப்போது முன்னேறிவிட்டது. சாதாரண புரொஜக்டரில் ஒரு ஸ்பெஷல் லென்ஸைப் பொருத்திவிட்டால் போதும்.

பேட்டி: எஸ். சந்திரமௌலி

# நேரம் நல்ல நேரம்

## கமல் பதில்கள்



மிருணாள் சென்



கமல்

4. போன வாரம் ஸ்ரீமதி ராஜேஸ்வரி சுப்பிரமணியம், திருச்சியிலிருந்து கேட்ட கேள்விக்கு ஏதோ ஜோக் சொல்றேன்னு சொன்னீங்க — அந்த ஜோக்கை இப்பச் சொல்லுங்களேன்?

அடுத்த வாரம் சொல்றேன்னு சொன்னேன். ஒரு வாரம் காக்க வச்சதுக்காக ரெண்டா வேணும்னாலும் சொல்லிடறேன்... அதாவது இது சினிமாவுல பார்க்க நல்லா இருக்கும்னு எனக்குத் தோணிச்சு; ரேடியோவில கேக்க எவ்வளவு சுவாரஸ்யமா இருக்கும்னு எனக்குத் தெரியாது. இது என்னுடைய நண்பர் சொன்ன ஜோக்:

ஒரு சின்னப் பையன் — ஒரு மூணு நாலு வயசு மதிக்கத்தக்க, குறும்பு கண்களில் ததும்பும் பையன் — ஒரு வீட்டு வாசல்ல, எட்டாத காலிங் பெல்லை எம்பி, குதிச்சுக் குதிச்சு அடிக்க முயற்சி பண்ணிக்கிட்டிருக்கான். ஒரு வயசான கிழவனார் அந்தப் பக்கமா வராரு. வந்ததும் அந்தப் பையனோட முயற்சியைப் பார்த்து, 'என்னப்பா, பெல்லை அடிக்கணுமா?' அப்படீன்னு கேக்கறாரு. 'ஆமா' அப்படீங்கறான் பையன். உடனே சிரிச்சுக்கிட்டு, கிட்டே வந்து அவன் கன்னத்தைக் கிள்ளிவிட்டு, பெருந்தன்மையோட அவர் மூணு தடவை அந்த பெல்லை அடிச்சதும், அந்தச் சின்னப் பையன், 'வாங்க தாத்தா, ஓடிப்போயிடலாம். வூட்டுக்காரர் கதவைத் தொறக்கறதுக்குள்ள!' அப்படீன்னு சொல்றான்!

இன்னொண்ணு எழுத்தாள நண்பர் தூயவன் சொன்னதாக எனக்குத் தெரிய வந்தது: ஒரு ஆளு ஒரு கிணத்துக்கிட்ட நின்னுக்கிட்டு எட்டு....எட்டு....எட்டுன்னு குதிச்சுக்கிட்டு டான்ஸ் ஆடிக்கிட்டிருந்தானாம். ஒருத்தர் அந்தப் பக்கமா வந்தார். 'என்ன இப்படிக் குதிச்சிக்கிட்டிருக்கே'ன்னாராம். 'எட்டிப் பாரு கிணத்துக்குள்ளே'—ன்னானாம் அவன். சரின்னு இவர் எட்டிப் பார்த்ததும் காலைப் பிடிச்சு தூக்கி உள்ள தள்ளிட்டானாம். அவர் உள்ளே விழுந்ததும் ஒம்பது... ஒம்பது... ஒம்பதுன்னு தொடர்ந்து எண்ணிக்கிட்டிருந்தானாம் அந்தப் பைத்தியம்!

5. எஸ். அருணா, பாளையங்கோட்டை.
பரதநாட்டியம் ஒரு விதத்தில் யோகா பயிற்சிதான். இரண்டுக்கும் பல ஒற்றுமைகள் உண்டு என்று கூறுகிறார்களே? இதைப்பற்றித் தங்கள் கருத்து என்ன?

அதாவது... இந்தக் கதகளிக்கும் கராத்தேக்கும் சம்பந்தம் இருக்குன்னு ஒரு தியரி இருக்கு. அதைக் கேட்கும்போது கொஞ்சம் திகைப்பா இருக்கும் எனக்கு. எங்கிருந்து எதுக்கு சம்பந்தம்னு சொல்றேங்களோன்னு. ரெண்டும் வேறுபட்ட — தொழில் ரீதியில பார்த்தாக்கூட வெவ்வேறு விதங்கள். 'டீப்'பான ஆராய்ச்சி பண்றதுக்குண்டான ஞானமும் அதற்கான உள்ளமும் எனக்கு இல்லே. வேறு யாராவது யோகாவுக்கும் பரதநாட்டியத்துக்கும் மயூராசனத்துக்கும் அரை மண்டி அடவுக்கும் ஏதாவது சம்பந்தம் இருக்கான்னு சொல்லட்டும்... எனக்குத் தெரிஞ்சு எதுவும் இருக்கறதாத் தெரியலே. யோகாவுல இருக்கற உடல் நலத்துக்கான விஷயங்கள் வேணும்னு ஒரு எக்ஸர்சைஸ் பற முறைல பரதநாட்டியத்துல இருக்கலாமே தவிர, மற்றபடி இரண்டும் வெவ்வேறு விதங்கள். அவற்றின் குறிக்கோள்கள் வெவ்வேறு.

6. எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.
பாத்திரத்தோடு ஒன்றிவிடுகிற நிஜப் பிரதிபலிப்பு, மிகைப்படுத்தப்படுகின்ற உணர்ச்சிகளின் தத்ரூப வெளிப்பாடு — எது உண்மையான நடிப்புக்கலை?

கொஞ்சம் காம்ப்ளிகேடட் க்வெஸ்சன். பாத்திரத்தோடு ஒன்றிவிடுகிற நிஜப் பிரதிபலிப்பு?... பாத்திரத்தோடு ஒன்றிவிடுதல்னு சொல்றபோது அதுல உங்களுக்கு டெக்னிக் ஒன்றும், வழி ஒன்றும் இருக்க முடியாது; தொழில் நுட்பம் என்று எதுவும் காட்ட முடியாது. ஏன்னு பாத்திரத்தோடு ஒன்றி, கொலை பண்ற ஸீன் வர அன்னிக்குப் பூரா பயங்கரமா இருக்கணும்... அதாவது மெத்தட் ஆக்டிங்னு வெஸ்டர்ன் கன்ட்ரீஸ்ல கேலி பண்ணுவாங்க... நிஜமாகவே கொலை பண்ணிடறது பாத்திரத்தோடு ஒன்றி — அப்படீன்னு கற்பழிப்புக் காட்சியிலே என்ன ஆகும்னு யோசிச்சுப் பாருங்க!

இந்தப் பாத்திரத்தோடு ஒன்றிவிடுகிற நிஜப் பிரதிபலிப்பில் எனக்கு அவ்வளவு நம்பிக்கை கிடையாது. அது ஆரோக்கியமான செயல் கிடையாது. அதனால அதை நான் அவ்வளவாச் சொல்ல மாட்டேன்.

மிகைப்படுத்தப்படுகிற உணர்ச்சிகளின் தத்ரூப வெளிப்பாடு — அது வந்து.... தத்ரூபத்துக்கு விதிவிலக்காய்விடுகிறது. ஏன்னு மிகைப்படுத்தப்படும்போது, தத்ரூபத்திலிருந்து சற்றே மாறுபட்ட ஒரு செயலாகி விடுகிறது... இப்படி இந்தக் கேள்வியிலேயே ஒருசில வித்தியாசங்கள் தெரிகிறது. இரண்டு நடிப்புமே உண்மை இல்லை. எது உண்மை

யான நடிப்புன்னு எனக்குத் தெரிஞ்சா நான் இங்க உட்கார்ந்திருக்க மாட்டேன். 'ஆஸ்கார்' வாங்கிட்டிருப்பேன்.... அது என்னங்கறதைக் கண்டுபிடிக்கிற முயற்சிலதான் நான் இன்னும் தொழில்ல இருக்கேன்!

7. ஏ. பிரபாகரன், கோவை.
லாஸ் ஏஞ்சல்ஸ் ஒலிம்பிக்கில் ஒரு பதக்கம் கூட நமக்குக் கிடைக்கவில்லை என்று நினைக்கும்போது உங்களுக்கு எப்படி இருக்கிறது?

தமிழ்ப் படத்துக்குத் தங்கப் பதக்கம் ஜனாதிபதிக்கிட்டே விருந்து கிடைக்காத தாபத்தை விடச் சற்றே அதிகமானதாய் இருக்கிறது.

8. இந்திரா, சயான், பம்பாய்.
கமலிடம் இருப்பது? கமலிடம் இல்லாதது?

ம்...ம்... நிறையச் சொல்லலாம். உங்களுக்குக் கொஞ்சம் சிரிப்பு வர மாதிரி சொல்லணும்னு—

இருக்கிறது. இப்போதைக்கு — உங்க தயவுல கொஞ்சம் பணம்.

இல்லாதது. நிம்மதி — இன்கம்டாக்ஸ்காரங்கன்னு இருக்காங்களே! ஆக அதை வேணும்னு சொல்லலாம்... இல்லாததுன்னு நிறைய, பெரிய பட்டியல் போட்டு வச்சிருக்கேன். அந்தப் பட்டியலைப் படிக்க விரும்பலே நான்.

9. பி. சோமசுந்தரம், அழகனுபுரம்.
படப்பிடிப்பு இல்லாத ஓய்வு நேரங்களில், தங்களின் சிந்தனை என்னவாக இருக்கும்?

உண்மையா சொல்லணும்னு, 'ஐயோ, அடுத்த நாள் ஷூட்டிங் உடனே வந்துடுமே'ங்கற ஒரு தவிப்பு இருக்கும். இந்த விடுமுறை நாள் நீடிக்காதான்னு ஒரு சின்ன துக்கம் இருக்கும். இது தவிர பாக்கி சிந்தனைகள் எல்லாம் நிறையவே இருக்கும்... இந்தச் சினிமாக்காரங்களுக்கே உரித்தான சிந்தனைகள்... இந்தப் படத்துல இந்தக் காட்சி நல்லா இருந்ததா...ங்கற மாதிரி... லீவுன்னு எடுத்துக்கிட்டு வந்து — பஸ்மேஸ்ஸ் ஹாலிடேன்னு சொல்லுவாங்க — அத லீவுன்னும் பயன்படுத்திக்காம, தொழிலாவும் பயன்படுத்திக்காம ரெண்டுங்கெட்டான் ஹாலிடேயா வச்சிக்கிட்டுத் தவிக்கிற ஒரு கூட்டத்தைச் சேர்ந்தவன் நான்! லீவுல, இந்த சினிமாவ ஒரு பத்து நாளைக்கு நினைக்கக் கூடாதுன்னு தீர்மானிச்சுக்கிட்டு, பிலிம் பெஸ்டிவலுக்குப் போய் சினிமா பார்க்கற கூட்டத்தைச் சேர்ந்தவன் நான். ஆக... விடுமுறையிலும் சிந்தனை சினிமாவைப்பத்தித் தான் இருக்கும் மறுபடியும்!

10. செல்வி சங்கீதா, சென்னை—15.
ரத்த தானத்தில் நீங்கள் அதிக ஆர்வம் காட்டுவது ஏன்?

அது என் உடம்போட உறதிவது, அதனால்.

11. நிர்மலா ரமணி, கோவில்பட்டி.
உலகப் புகழ்பெற்ற இயக்குநர்களின் ஒருவரான திரு மிருணாள்சென் அவர்கள், மசாலாப் படங்களில் நீங்கள் தவறாகப் பயன்படுத்திக் கொள்ளப்படும் சூழ்நிலையிலிருந்து விலகி வரவேண்டும் என்றும், அவரது படத்தில் உங்கள் கால்ஷீட் கிடைக்குமானால், உங்களை வைத்தும் படம் எடுக்கும் எண்ணம் உண்டு என்றும் ஒரு பத்திரிகையில் கூறியுள்ளார். இதுபற்றி உங்கள் கருத்து என்ன?

அவர் தெரிவித்த இரண்டாவது கருத்து பற்றி எனக்கு ரொம்ப சந்தோஷம். ஆனா, மசாலா படத்துல தவறாகப் பயன்படுத்தப் படறதுன்னு... ஓட்டுப் போட்டு ஒரு அரசியல் வாதியைக் கொண்டுவர மாதிரிதான் இது... மக்கள் விருப்பம் மட்டுமே... அது மகேசன் தீர்ப்பு என்று சொல்ல மாட்டேன். வேணும்னு அதை எதிர்க்கலாம். ஆனா அதுக்கு ஓரளவுக்குச் செவி சாய்க்கணும் நாங்க. ரெண்டரை ரூபா டிக்கெட்டை கியூவுல நின்னு வாங்கிட்டு வர ரசிகனுக்கு, என் கடமை, அவனைத் திருப்திப்படுத்த வேண்டியது... மசாலா படத்தில் தவறாகப் பயன்படுத்தப்படவில்லை. பயன்படுத்தப்படுறேன், அவ்வளவுதான்.

மிருணாள் சென் படத்துல நடிக்கிறது பற்றி ரொம்பச் சந்தோஷம். அதுக்கு நேரம் கிடைச்சதுன்னு அவரை மாதிரியே நானும் பெருமையா நினைச்சு செய்யக் கூடியவன்தான் நான்.

12. சு. கணேசன், சென்னை—15.
பிற நடிகைகளுடன் இணைத்து உங்களைப் பற்றி வரும் கிசுகிசுக்கள், உங்கள் இதயத்தையோ, இல்வாழ்க்கையையோ எந்த விதத்திலாவது பாதித்திருக்கிறதா?

இதுக்குக் கொஞ்சம் யோசிச்சுப் பதில் சொல்லணும்... அடுத்த வாரம் சொல்லட்டுமா?

தொகுப்பு: சித்தார்த்



(வி)சித்திரம்

பெண் வளர்ச்சியைச்
சித்திரி என்றால்
இந்தச் சித்திரங்கள் ஏன்
அவயவத்தில் மட்டும்
அக்கறை கொள்கின்றன?

—பகவத்சிங் பாரதி.



## அமெரிக்காவிலிருந்து ஓர் அறிக்கை

''இங்கு இவ்வளவு முன்னேற்றத்துடன் இப்படி வந்து சேருவார் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை'' என்கிறார் டாக்டர் எலியட் ப்ரீட்மென். டாக்டர் ப்ரீட்மென் அமெரிக்காவிலிருந்து சென்னை வந்த மருத்துவர். சிறுநீரகம் பற்றியும் சர்க்கரை நோய் பற்றியும் இவர் அனுபவப்பட்ட நிபுணர். தமிழ் நாட்டு மக்கள் எம். ஜி. ஆர். மீது பொழியும் அன்பை நேரில் கண்ட டாக்டர் ப்ரீட்மென், ''தேவைக்கேற்ப அமெரிக்காவின் எந்தப் பெரிய டாக்டரையும் இங்கு வரவழைத்து நான் வைத்தியம் செய்கிறேன்'' என்று கூறியிருக்கிறார். கூறியபடி எம். ஜி. ஆரைக் கண்ணும் கருத்துமாகப் பார்த்துக்கொள்கிறார்.

அமெரிக்க டாக்டர்களைப் பாராட்டு முன் இவ்வளவு நல்ல நிலையில் எம். ஜி. ஆரை இங்கு கொண்டு வந்த அப்போலோ மருத்துவ மனையின் டாக்டர்களைத்தான் உளமாறப் பாராட்ட வேண்டும். ''அக்டோபர் 20ம் தேதிதான் மிகவும் கடுமையாகப் போய் விட்டது. பயந்துவிட்டோம். ஆனால் விடவில்லை. 24 மணி நேரமும் அதன் ஒவ்வொரு நிமிஷமும் விறுவிறுவென்று என்னென்ன செய்ய முடியுமோ அத்தனையும் செய்தோம்.

# எம்.ஜி.ஆர்

## வேகமாகக் குணமடைந்து வருகிறார்

**எம்.** ஜி. ஆர். குணமடைந்து வருகிறார்' என்ற செய்தி காதில் தேனாகப் பாய்கிறது. ஒரு நிம்மதியுடன் ஆண்டவனுக்கு நன்றி செலுத்த வேண்டிய நேரம் இது. வலது பக்கக் கை கால்தான் செயலற்ற நிலையில் இருந்தது. இப்போது மூளையின் பின்பக்கம் உள்ள வீக்கம் வடிந்துவிட்டதால் முன்னைவிட கொஞ்சம் அவரால் வலது பக்கக் கைகால்களை அசைக்க முடிகிறது.

முகத்தில் நல்ல தெளிவு; யாரையும் அடையாளம் கண்டுகொள்ளும் நல்ல நினைவு; ''போதும்'', ''வேண்டாம்'' , ''அப்புறம்'' என்று தன் தேவைகளை ஓரிரு வார்த்தைகளில் சொல்லும் முன்னேற்றம். Speech Therapy Physio therapy போன்ற பயிற்சிகளுக்கு ஒத்துழைக்கும் ஆர்வம் — எல்லாம் எம். ஜி. ஆர். வெகு விரைவில் குணமடைந்து வருகிறார் 'என்பதைக் காட்டுகின்றன..

இன்னும் சில வாரங்களில் அவர் உடம்பு கொஞ்சம் பழைய நிலைமைக்குத் திரும்பியவுடன் புதிய சிறுநீரகத்தைப் பொருத்தப் போகிறார்கள். கழிவுப் பொருள்களை வெளியேற்ற ஒரு சிறுநீரகம் போதும். அதை அளிக்க முன்பே தேர்ந்தெடுக்கப்பட்ட இரு உறவினர்கள் — சித்தமாய் இருக்கிறார்கள். இருவரில் ஒருவருடைய சிறுநீரகத்தைப் பொருத்தப் போகிறார்கள்.

நுரையீரலில் நீர் சுரந்து மூச்சு விட முடியாமல் இருந்தது; இதனால் போதிய பிராண வாயு கிட்டாததால் மூளையில் ஏற்கனவே பழுதுபட்டிருந்த இடங்கள் மேலும் சீர்கெட்டன. அத்துடன், சிறுநீரகக் கோளாறு வேறு. நாம் கூப்பிட்டால் நினைவில்லை. அப்படி ஒரு நிலையிலிருந்து உயிரைத் திருப்பிக் கொண்டு வந்தோம்!'' என்று டாக்டர் பாலசுப்ரமணியம் கூறும்போது நமக்குள் நன்றியும் பெருமையும் ஏற்படுகின்றன.

டாக்டர் பாலசுப்ரமணியம் எம். டி. படித்த நம்ம ஊர் Internal Medicine ஸ்பெஷலிஸ்ட். அப்போலோ மருத்துவ மனையைச் சேர்ந்தவர். இளைஞர். திறமைசாலி.

ஒரு தனி போயிங் விமானத்தில் எம். ஜி. ஆருடன் சுமார் 21 பேர் வந்திருக்கிறார்கள். கிட்டத்தட்ட ஒன்பது பேர் டாக்டர்கள். இவர்களில் மூன்று பேர் விமானப் படையின் டாக்டர்கள் என்று சொல்லப்படுகிறது. இவர்களுக்குத் துணையாக ஏர் இந்தியாவின் தலைமை நிர்வாகியும் அவர்களுடன் விமானத்தில் வந்திருக்கிறார்.

சென்னையிலிருந்து டாக்டர் நரேந்திரன் நரம்பு அறுவை நிபுணர் டாக்டர் ஜகந்நாதன் நரம்பு மருத்துவ நிபுணர், டாக்டர் பி. ஆர். சுப்பிரமணியம் — எம். ஜி. ஆருடைய குடும்ப

நியூயார்க்கர்

மருத்துவர் இவர்களன்றி டாக்டர் நாயுடு, டாக்டர் கல்யாண் சிங் என்ற இரண்டு மயக்க மருந்து கொடுக்கும் நிபுணர்கள் வந்திருக்கிறார்கள்.

நுரையீரலில் மீண்டும் நீர் கோத்துக் கொண்டால் என்ன செய்வது என்ற முன்னேற்பாடுகளுடன் டாக்டர் நாயுடுவும், டாக்டர் கல்யாண் சிங்கும் வந்திருக்கிறார்கள். நல்லவேளையாக அப்படி ஒன்றும் நேரவில்லை.

இத்துடன் அமைச்சர் ஹண்டே, இரண்டு நர்ஸ்கள், பாதுகாப்புக்காக மூன்று காவலர்கள். — இப்படி ஒரு பந்தோபஸ்து கவனிப்பு.

எம். ஜி. ஆருடன் அவர் மனைவி வி. என். ஜானகி அவர்களும், திருமதி ஜானகி அவர்களின் நெருங்கிய நண்பர் (சித்ரா கிருஷ்ணசாமியின் மனைவி) திருமதி யோகம் அவர்களும் வந்திருக்கிறார்கள். மருத்துவ மனைக்குள்ளே அவர்கள் தங்கியிருக்க வி. ஐ. பி. விருந்தினர் விடுதி இருக்கிறது.

எம். ஜி. ஆரை நர்ஸ்களின் ஆதரவுடன் சுமார் இரண்டு மூன்று மணி நேரம் உட்கார வைக்கிறார்கள். நமது ஊர் நர்ஸ்களை எம். ஜி. ஆருக்கு நன்கு தெரிந்திருப்பதால் அவர்கள் தொடர்ந்து இங்கே அவர் குணமடையும் வரை இருக்கப் போகிறார்கள். இன்னும் ஆறு வாரத்திற்கு உடல் பழையபடி வர மருந்துகளும், பயிற்சிகளும் கொடுத்து வருவதால் மற்றைய டாக்டர்கள் இந்தியா திரும்புகிறார்கள். இப்போது வாரத்திற்கு மூன்று முறை இரத்தம் சுத்திகரிக்கப்படுகிறது. (HEMO DIALYSIS) அவரைப் பார்க்க டாக்டர்களைத் தவிர அவர்கள் குடும்பத்தினர் தவிர யாரையும் அனுமதிக்கவில்லை.

எல்லாம் சரியாக இருக்கிறதா என்று பார்க்க — ஒரு இரண்டாவது அபிப்பிராயம் கூற — டாக்டர் பிரேக் என்ற சிறுநீரக நிபுணர் வருகிறார். வலது பக்கப் பிடிப்பைக் கவனித்துப் பார்த்து ஏதேனும் இதைவிட அதிகம் செய்ய வேண்டுமா என்று சொல்ல டாக்டர் கிளம் என்ற அமெரிக்க டாக்டர் வருகிறார்.

''முன்பிருந்ததற்கு இப்போது முதல்வர் எம். ஜி. ஆருக்கு எவ்வளவோ உடல் நிலை தேவலாம்'' என்று பெருமையுடன் குறிப்பிடுகிறார் டாக்டர் பாலசுப்பிரமணியன்.

விரைவில் அப்போலோ மருத்துவமனை டாக்டர் பி. சி. ரெட்டி வருவார். சிறுநீரக அறுவையின்போது உடனிருப்பார் என்று சொல்லப்படுகிறது.

எம். ஜி. ஆரது குடும்ப வைத்தியர் நிரந்தரமாக இங்கு முதல்வருடன் இருப்பார். ஏனெனில் அவர் சொன்னால்தான் சில சமயம் எம். ஜி. ஆர். கேட்பாராம்! 35 வருஷ பழக்கம்.

''எம். ஜி. ஆருடன் பழகும்போது — பணி புரியும்போது — நமது பெருமதிப்புக்குரியவராகிவிடுகிறார் அவர். அத்தனை வாத்சல்யம், அன்பு. அவருக்காக எதையும் செய்யத் தயாராக இருக்கும் தியாக உணர்வுகளைப் பிறரிடம் அவர் எழுப்பி விடுகிறார். இங்கே இருக்கும் செக்யூரிட்டி கார்டுகள் கூட அத்தனை பேரன்புடன் அந்தப் பணியைச் செய்கின்றனர்.'' என்று டாக்டர்கள் கூறும்போது எம். ஜி. ஆரது அற்புத தனி மனித குணங்கள் நம்மைத் தொடுகின்றன. அது எப்படி அவரது ரசிகர்களை எல்லாம் அவரிடம் ஈர்த்து வைத்திருக்கிறது என்பது புரிகிறது. நாட்டு மக்கள் எல்லாம் ஏன் அவருக்காகப் பிரார்த்தனை செய்கிறார்கள் என்பது நமக்குப் புரிகிறது.

அவர் குணமடைந்து வருகிறார்.

---

## அடுத்த வாரம்

### இசை விழா சிறப்பிதழ்

முதல்வர் எம். ஜி. ஆருக்கு கர்நாடக சங்கீதத்தில் உள்ள ஈடுபாடு அனைவரும் அறிந்ததே. ஆனால் அவர் எந்தெந்தக் கலைஞர்களை எப்படி எப்படியெல்லாம் ஊக்குவித்தார் என்பது தெரியுமோ?



# முதல்வர் ஊக்குவித்த முதல்தரக் கலைஞர்கள்

வியப்பில் ஆழ்த்தும் புதிய தகவல்கள்

## சுதந்திரம் சுகம் தராது

சுயராஜ்யம் வந்த பின்னரும் நீண்ட காலத்துக்கு மக்களுக்குச் சிறந்த அரசாங்கமோ அதிகரித்த சந்தோஷமோ கிடைத்து விடாது என்பதை நாம் உணர வேண்டும். தேர்தல்களும் அதையொட்டிய லஞ்ச ஊழல்களும், அநீதிகளும், பண பலமும் அதன் கொடூரங்களும், நிர்வாக யந்திரத்தின் திறமையின்மையும் சேர்ந்து நமக்குச் சுதந்திரம் வழங்கப்பட்ட உடனே வாழ்க்கையை நரகமாக்கிவிடும். மக்கள் முன்பிருந்த ஆட்சியே எவ்வளவோ தேவலாம் என்று எண்ணுவார்கள். அந்த (ஆங்கிலேய) ஆட்சியில் திறமையும் அமைதியும் நிர்வாக நேர்மையும் இருந்தனவே என்று நினைத்துப் பார்ப்பார்கள். சுதந்திரம் அடைந்தால் நமக்குக் கிடைக்கக் கூடிய லாபம் அடிமைத்தனத்திலிருந்தும் அதன் அவமானங்களிலிருந்தும் நாம் காப்பாற்றப்படுவது ஒன்று மட்டுமே.

என்றாலும் நாம் நம்பிக்கை இழந்துவிடக் கூடாது. அனைவருக்கும் கல்வி அறிவு கிடைக்கச் செய்வதில்தான் நிலைமை சீர்திருந்தும். இந்த அடிப்படைக் கல்வி மூலம் நன்னடத்தை, கடவுளிடம் பய பக்தி மனித குலத்தின் மீது அன்பு ஆகியவை மக்களிடம் குழந்தைப் பருவத்திலிருந்தே வளர்க்கப்பட வேண்டும். இதில் நாம் வெற்றி பெற்றாலே சுயராஜ்யம் மகிழ்ச்சி தருவதாக இருக்கும்.

—1920ல் சிறையிலிருந்தபோது
எழுதிய டைரியில்.

## தேர்தல் கேலிக்கூத்து

ஒவ்வொரு வேட்பாளரும் இவ்வளவுதான் செலவழிக்கலாம் என்று தேர்தல் சட்டங்கள் கூறுகின்றன. ஆனால் ஆளும் கட்சி ஏராளமாய்ப் பணம் சேகரித்து வேட்பாளர்களுக்காகச் செலவழித்து, தேர்தல் சட்டங்களில் உள்ள உச்ச வரம்புகள், கட்டுப்பாடுகளைக் கேலிக்கூத்தாக்குகிறது. பெரிய பெரிய கம்பெனிகளிலிருந்து ஆட்சிக்கு நன்கொடை பெறுவதும், பின்னால் அவற்றுக்கு சலுகைகள் வழங்குவதும், பெர்மிட் லைசென்ஸ் கோட்டா ராஜ்யத்தில் ஆளும் கட்சிக்கு எளிதாக இருக்கிறது. பணபலம் மட்டுமின்றி ஆளும் கட்சிக்கு உள்ள அதிகார பலமும் தேர்தல்களை நியாயமற்றதாக்குகிறது. மறுபடி மறுபடி ஒரு கட்சியே பதவிக்கு வருவது தவிர்க்கப்பட வேண்டுமெனில் தேர்தலுக்கு முன் சில காலத்துக்கு ஆட்சியில் இருப்பவர்களின் அதிகாரங்கள் கணிசமாகக் குறைக்கப்படல் வேண்டும். சலுகைகள் அறிவித்தல் அரசாங்கக் கஜானாவிலிருந்து செலவு செய்தல் ஆகியவற்றுக்குக் கட்டுப்பாடுகள் இருக்க வேண்டும். ரொம்ப அத்தியாவசியமான சில காரியங்களை மட்டுமே கவனிக்க அமைச்சரவை இந்தக் கால கட்டத்தில் அதிகாரம் பெற்றிருக்க வேண்டும்.

—ஆகஸ்டு 27, 1960



✖ பிறந்த நாள்: டிசம்பர் 10, 1878

## ஜாதிகள் இல்லையடி

ஜாதிகளை ஒழிப்போம் என்று ஒருபுறம் மார்தட்டிக் கொண்டே அந்த லட்சியத்தை நோக்கி நடை போடுகிறோம் என்று கூறிக் கொண்டே ஜாதிப் பிரிவினைகளை சாசுவதமாக்கி வருகிறோம். பின்தங்கிய வகுப்பினரை உயர்த்தி விடுவது என்பது ஜாதி அடிப்படையிலேயே தொடர்ந்து நடந்து வருகிறது. இந்த அடிப்படையில் சலுகைகள் அளிப்பது தவறு; ஜாதி பேதமற்ற சமுதாயம் என்ற லட்சியத்துக்கு முரணானது என்பது படிப்படியாக உணரப்பட்டு வருகிறது. இந்தச் சலுகைகள் காரணமாகத் தொடர்ந்து பின்தங்கிய வகுப்பினராகவே இருப்பது லாபகரமாக இருந்து வருகிறது. அதிலும் அந்தப் பின்தங்கிய வகுப்பினரில் சிலரே— இவர்கள் உண்மையில் பொருளாதார ரீதியில் பிற்பட்டவரில்லை — பலன்களைத் தட்டிக் கொண்டு போகின்றனர். ஆகமொத்தம் சலுகைகள் பல காலம் தரப்பட்ட பின்னரும் அந்தச் சமுதாயம் முன்னேற முடிவ

# இன்றையச் சூழலில் ராஜாஜி கருத்துக்கள்

இல்லை. எனவே ஜாதி அடிப்படையைக் கைவிட்டுப் பொருளாதார அடிப்படையில் பிற்பட்ட வகுப்பினரை நிர்ணயித்து உதவு வ்தே நமது பிரகடனப்படுத்தப்பட்ட ஜாதிக ளற்ற சமுதாய லட்சியத்துக்கு ஏற்றதாக இருக்கும். இதுபற்றித் தைரியமாக நாம் முடிவெடுக்க வேண்டும்,

—அக்டோபர் 8, 1960

### விதை நெல்லை விழுங்கலாமா?

விவசாயி விதை நெல் என்று தனியே எடுத்து வைப்பான். அதுபோல சேமிப்பு மூலதனமாகி, மேலும் செல்வத்தைஉற்பத்தி செய்கிறது. விதை நெல் எவ்வளவு முக்கியம் என்பது விவசாயிக்குத் தெரியும். மூலதனம் எவ்வளவு முக்கியம் என்று தொழிலதிபர், வர்த்தகருக்குத் தெரியும். மூலதனம் உரு வாவதை அழிக்கிற எந்த அரசாங்கக் கொள்கையும் தற்கொலைக்கு ஒப்பானது. விதை நெல்லைச் சாப்பிட்டு விடுவது சுலபம். ஆனால் நாளை பட்டினி கிடக்க நேரலாம். அரசின் பொருளாதாரக் கொள்கை மூல தனம் நிறைய உருவாகச் சாதகமாய் இருக்க வேண்டும். சோஷலிஸம் என்ற பெயரில் அபரிமித வரிகள் என்ற ஆயுதம் கொண்டு மூலதனத்தின் மீது போர் தொடுப்பது விதை நெல்லைச் சாப்பிட்டு விடுவதற்குச் சமம்.

—டிசம்பர் 17, 1960

### மாநில அரசா, நகரசபையா?

நாட்டின் ஒருமைப்பாடும், ஸ்திரத் தன் மையும் அவசியமானவைதாம். இவற்றை மத்தியிலே எல்லா அதிகாரங்களையும் குவித் துக்கொள்வதால் அடைய முடியாது. மாநில அரசுகள் மான்யம் பெறும் நகராட்சிகள் போல் நடத்தப்படுகின்றன. இந்தப்போக்கு மணல் மீது வீடு கட்டுவதற்குச் சமம். இத்தகைய ஒருமைப்பாடும் ஸ்திரத் தன்மை யும் நீடிக்காது. மூலைக் கொன்றாகப் பிய்த் துக்கொண்டு போகும். பகுதிகளைக் கட்டிக் காக்க மத்தியில் சக்தி வாய்ந்த நபர் இல் லாதபோது என்ன நடக்கும்? எனவே ஸ்திரத் தன்மையை நாம் மாநிலங்களைப் பலப்படுத்தி அதே நேரத்தில் தேசிய உணர்வை வலியுறுத்தி, மத்தியில் ஒன்று பட்ட கூட்டாட்சிக்கு வழிதேடி அடைய வேண்டும். இதற்கு அரசியல் சாசனத்தில் சில மாறுதல்களைச் செய்யவும் தயங்க வாகாது. மத்தியில் பலமான ஆட்சி என்ப தற்காக மாநிலங்களைப் பலவீனப்படுத்துவது மாபெரும் தவறு.

—1957 ஜூன் 26

### வோட்டுக்கள் சிதறினால்...

எல்லாக் கட்சிகளுக்கும் அடிப்படையில் ஒரே நோக்கம்தான். அது மக்கள் நலன், மக்களின் மகிழ்ச்சி. எனவே ஒத்த நோக் குடைய,ஒத்தகொள்கைகளையுடைய கட்சிகள் ஒன்றிணைவதே நல்லது. சோஷலிஸம் பேசிக் கொண்டே நாலு கட்சிகள் இருப்பதில் என்ன பயன்? ஆளும் கட்சியுடன் இணைந்து விடலாம். அதேபோல ஆளும் கட்சிக்கு நேர்மாறான கொள்கைகள் மூலம் மக்கள் நலனை அடைய விரும்பும் கட்சிகள் இணைய வேண்டும். இப்படி நேர்ந்தால்தான் நாடாளு மன்ற ஜனநாயகம் திருப்திகர மாகச் செயல்படும். இப்படி நடக்கவில்லை யெனில் வோட்டுக்கள் சிதறி, சிறுபான்மை வோட்டுக்கள்பெற்ற ஒரு கட்சி தொடர்ந்து பதவியில் இருந்து சர்வாதிகாரம் செலுத்தி வருவதைத் தவிர்க்க முடியாது.

1961 ஜூலை 1

### இரட்டைத் தலைவலிகள்

கண்ட்ரோல்கள் (பர்மிட் லைசென்ஸ் கோட்டா) சமதர்ம சமுதாயத்தை உரு வாக்காது. மாறாகப் பணக்காரர்களை மேலும் பணக்காரர்களாக்கும். ஏழைகளின் முன் னேற்றம் தடைப்படும். பண வீக்கமும் உயர் மட்டத்தில் இருப்பவரைப் பாதிக்காது. மத்தியதர வகுப்பினரே அவதிப்படுவார்கள். பண வீக்கத்தால் விலை வாசிகள் உயர மாதச் சம்பளம் பெறும் மக்கள்தான் சொல் லொணாத் துயர் அடைகின்றனர். விலை வாசி உயர்வு சேமிப்பை அழிக்கிறது.

பண வீக்கம் டம்பாச்சாரித் திட்டங் களாலும் உற்பத்திக்கு உதவாத அரசுச் செலவினங்களாலும் இவற்றை ஈடுகட்டப் போடப்படும் பற்றாக்குறைப் பட்ஜெட் டாலும் உருவாகிறது. பண வீக்கமும் சகலத்திலும் அரசாங்கம் தலையிட்டே ஆகவேண்டும் என்ற கொள்கையும் — இந்த இரண்டும்தான் இந்தியப் பொருளாதாரம் முன்னேற முடியாமல் சாபக்கேடாக அமைந் துள்ளன

1960, செப்டம்பர் 24

---



**அவள்:** உன்னுடைய குதிரை காணாமல் போன தற்கு போய் இவ்வளவு சந்தோஷமாக இருக்கிறாயே, ஏன்?

**இவன்:** பின்னே? அந்நேரம் குதிரை மேல் நானும் இருந்திருந்தால் நானும் அல்லவா காணாமல் போயிருப்பேன்!

பழனிசாமி.



ஜலதோஷம் பிடித்தால் குழந்தையின் உறக்கம் நாசம்

# விக்ஸ் வேப்போரப்பினுல் இரவோடிரவாக சுகம்

(அவ் வேலையைச் செய்வது அன்னையின் பாசம்)

ஜலதோஷம்—அதனுல் பாதிக்கப்
பட்டவரே அதன் தொல்லையை
அறியமுடியும். உறங்க முடியாது...
மூக்கடைப்பு...சளி...இருமல்...உடல்
முழுவதும் வலி...இவ்வளவையும்
பாவம் குழந்தை தாங்க முடியுமா?

மாதாவின் மந்திரக்கரம் அறியுமே
ஜலதோஷத்தின் நிவாரணத்தை.
அப்பாசக்கரம் தொடுவது விக்ஸ்...
அதை குழந்தையின் மூக்கு,
தொண்டை, நெஞ்சு ஆகியவற்றில்
அன்புடன் இதமாகத் தடவுகிருள்
அன்னை...அதிலும் முக்கியமாய்
முதுகிலே! அப்படித் தடவாவிட்டால்
அம்முயற்சி முழுதும் அரைகுறை
யாகிவிடும். தாயின் பாசம்
குழைத்துத் தடவப்படும் விக்ஸ்,
இரட்டைச் செயல் புரிகிறது: ஒன்று,
மருந்து கலந்த (மெடிக்கேட்டட்)
இதன் ஆவி மூக்கடைப்பை
நீக்குகிறது. இரண்டு, சருமத்தில்
தடவப்படுவதால் உடல் வலியைப்
போக்குகிறது! அன்பும் பாசமும்
இணைந்த அன்னையின் விக்ஸ்
சிகிச்சையால், குழந்தை அயர்ந்து
உறங்குகிறது. விடியும்வரை...முன்
போலவே குழந்தை ஆரோக்கியமும்
சுறுசுறுப்பையும் அடைகிறது!






**விக்ஸ்**
வேப்போரப்

**சுவாச நிவாரணம் அளிக்கிறது**
**நிவாரண அனுபவத்தை**
**உணரவைக்கிறது.**

RHL/VR-6 TAM R

# நெருப்பு மலர்

## 19

மொட்டை மாடியில் பாயை உதறிப் போட்டுத் தலைக்குத் தலைகாணி கூட இல்லாமல் படுத்துக் கிடந்தார் அனந்தசாமி. வெறும் படுக்கைதான். தூக்கம் இல்லை. எப்போதோ விழிப்பு வந்து விட்டது. இப்போதெல்லாம் முன்பு மாதிரி தூக்கம் வருவதில்லை. ஒரு வருடத்துக்கு முன்புகூட படுத்த ஐந்தாவது நிமிடம் கண் செருகிக் கொண்டு போகும். உடம்பு கட்டையாகி விடும். கூப்பிட்டுப் பார்த்தால் பதில் வராது. காலை முதல் கோழி கூவுகிறவரை நிச்சிந்தையான தூக்கமாக இருக்கும். ஒரு புரளல், ஒரு கனவு. ஒரு திடுக்கிடல் எதுவும் இருக்காது.

ஆனால் இப்போது கொஞ்ச நாட்களாக அப்படித் தூங்க முடியவில்லை. படுத்தவுடனே தூக்கம் வருவதில்லை. கட்டிடத்தின் எதிரில் ஆர்ப்பரிக்கிற சமுத்திர ஓசையைக் கேட்டுக் கொண்டே, சற்றுத் தள்ளித் தெரிகிற அன்னை வேளாங்கண்ணிக் கோயிலின் உச்சி விளக்கைப் 'பார்த்தபடி அப்படியே மல்லாந்து நீண்ட நேரம் படுத்துக்கொண்டிருப்பார். பார்வை இடையிடையே தடம் மாறும். நட்சத்திரங்களின் மீது போகும். சப்தரிஷி மண்டலத்தைத் தொடும். துருவ நட்சத்திரத்தை ஆராயும். பஞ்சுப் பொதி மேகங்களில் சஞ்சரிக்கும். அப்படி சஞ்சரிக்கிறபோது எண்ணங்களையும் கூடவே சஞ்சாரம் பண்ண அழைத்துப் போகும்.

தினமும் அவருக்குள் தோன்றுகிற கேள்வி அன்றும் தோன்றும். 'இந்த வாழ்க்கையின் நோக்கம்தான் என்ன... தினமும் தூங்கி எழுந்து, காப்பி குடித்து, குளித்து, சாப்பிட்டு ஆபீஸ் போய்த் திரும்பி வந்து சாப்பிட்டு, படுத்துத் தூங்கி.... இதுதான் வாழ்க்கையா.... அந்த ஆபீஸ் போகிற கொஞ்ச நேரம் கூட மீண்டும் சாப்பிட வேண்டும். அதற்கான உணவை, உணவுக்கான செலவை தேடவேண்டும் என்கிற காரணத்துக்காகத் தான். இந்தச் சாப்பிடுகிற அத்தியாவசியத் தேவையில்லாத பட்சத்தில் நூற்றுக்குத் தொண்ணூறு பேர்கள் ஆபீஸ் போகப் போவதில்லை... சம்பாதிக்கப் போவதில்லை.. இப்படிச் சாப்பிடுவதும், சாப்பிடுவதற்காகச் சம்பாதிப்பதும், சம்பாதித்ததில் சாப்பிடுவதும்.....

இதுதானா வாழ்க்கை? இதற்காக மட்டும் தானா..? திடீரென்று அவருக்கு பாரதியாரின் பாடல் நினைவுக்கு வந்தது.

தேடிச் சோறு நிதம் தின்று — பல
சின்னஞ் சிறு கதைகள் பேசி — மனம்
வாடித் துன்பம் மிக உழன்று — பிறர்
வாடப் பல செயல்கள் செய்து — நரை
கூடிக் கிழப்பருவமெய்தி — கொடுங்
கூற்றுக் கிரையெனப் பின்மாயும்—பல
வேடிக்கை மனிதரைப் போலே — நான்
வீழ்வேனென்று நினைத்தாயோ

வாய் விட்டு அவ்வரிகளைச் சொன்னவர் சட்டென்று சிரித்துக் கொண்டார். அப்படி வீழாமல் பின் வேறென்ன செய்ய முடியும் என்று கேட்டுக் கொண்டார். தினம் தினம் வயிற்றுக்குத் தேடி அலைவதற்கே பொழுது சரியாகப் போனால் வேறென்ன செய்ய முடியும்? செயலாக்க முடியும்? இந்தப் பாரத்தில் அழுந்தி அழுந்திப் புதையுண்டு போவதற்கா இத்தனை கோடி மக்கள்? எதற்காக இப்படிச் சிருஷ்டிக்க வேண்டும்? இந்த சிருஷ்டியின் நோக்கம்தான் என்ன?

விடை கிடைக்காத இந்தத் தினசரி சிந்தனையிலிருந்து மீண்டு எழுந்தபோது வானத்தில் இன்னமும் நரையோடி அலையோரங்கள் பளபளத்தன. சமுத்திர ஸ்நானம் முடித்து மெல்ல எழுந்து வெளிவருகிற மாதிரி சூரியன் மெலிசாய்த் தலைகாட்ட.. இவர் கிழக்குப் பார்த்து ஜபம் சொன்னார். பாயைச் சுருட்டி வைத்துவிட்டுக் கீழே இறங்கி வந்த உடனே மாடிப் படி அடியிலேயே ஆறுமுகம் தலையைச் சொறிந்து கொண்டு நின்றான். அவனது தயக்கத்தையும் தலைச்சொறிவையும் கவனித்த அவர்,

''என்ன ஆறுமுகம்?'' என்றார்.

''ஒண்ணுமில்லீங்க. மோட்டார் ஓடலீங்க....''

''மோட்டார் ஓடலியா?''

ஒரு விநாடி தயங்கி நின்றார். இரண்டு நாட்களாக ஓடாமலிருந்த மோட்டாரை நேற்றுதான் எலக்ட்ரீஷியனைத் தேடிப் பிடித்து அழைத்து வந்து சரிபார்த்தார். அவன் எதிரில் ஓடின மோட்டார் மீண்டும் ஓட மறுக்கிறது. அதுக்குக்கூடத் தன் சாதுத்தனம் தெரிந்திருக்கிறது என்று நினைத்துக் கொண்டார். எவ்வளவு பழுதுபட்டாலும் மக்கர் செய்தாலும் சிரித்துக் கொண்டே போய்விடுகிற சுபாவம் தெரிந்திருக்கிறது. அதனால்தான் இப்படி உபத்திரவப்படுத்துகிறது. தன்னை மட்டும் உபத்திரவப்படுத்தினால் தேவலை.

தன்னோடு அந்த வீட்டில் இருக்கிற மற்ற பேரையும் உபத்திரவப் படுத்துகிறதே. தன்னைப் போல அவர்கள் பேசாமல் இருக்க மாட்டார்களே? பணம் கொடுத்துத் தங்குகிறவர்களாயிற்றே... ஏற்கனவே பத்து அறைகளில் நான்கு அறைகள் காலியாகி விட்டன. ஒன்றில் அவர் தங்கிக்கொள்கிறார். மற்ற ஐந்தில் நான்குபேர்கள் மட்டுமே பணம் கொடுத்துத் தங்குபவர்கள். இன்னொரு அறையில் இருக்கிற சாயிராம் பணம் எதுவும் கொடுப்பதில்லை. கேட்டால் பணத்திற்குப் பதில் கவிதைகள் எழுதிக் கொடுத்து விடுவான். அத்தனையும் புதுக் கவிதைகள்.

''என்னால் முடிந்தது இதுதான் சார்... கொஞ்சம் பொறுத்துக்கோங்கோ. ஒரு படத்

துக்குப் பாட்டு எழுதுகிற சந்தர்ப்பம் கிடைக்கட்டும். உங்க வாடகை பாக்கி, சாப்பாட்டுப் பாக்கி எல்லாவற்றையும் தீர்த்து விடுகிறேன்'' என்பான்.

நல்ல துடிப்பான இளைஞன். வேகம் உள்ளவன். எழுத்துக்களில் அந்த வேகம் தெறிக்கும். பாரதியின் முற்போக்கு வாடை வீசும். அனந்தசாமி ஒரு பாரதிப் பைத்தியம். அதன் காரணமாகவே இரக்கப்பட்டு அவனுக்குத் தங்க இடம் கொடுத்திருந்தார். கடந்த மூன்று மாத காலமாக அவனிடம் அதற்குப் பணம் வாங்காததோடு, நல்லவன் என்கிற காரணத்தினால் ஹோட்டலிலிருந்து தமக்குக் காரியரில் வருகிற சாப்பாட்டைப் பகிர்ந்து கொடுப்பார். தினம் அவனோடு அட்படி பகிர்ந்துகொள்ள அவர் தயார்தான். ஆனால் வாங்கிக்கொள்ள அவன் தயாரில்லை.

ஒரு கவிஞனுக்குள்ள சுய மரியாதையும், தன்மானமும் அவனைத் தடுத்துப் பசியை மூடி விடும்.

''வேணும் சார். இப்போதான் சாப்பிட்டு வரேன்....''

''எங்கே சாப்பிட்டே?''

**இந்துமதி**



''ஒரு டைரக்டர்கிட்டே என் கவிதையைப் படிச்சுக் காண்பிச்சேன். அவர் ஆஹா ஓஹோன்னு அரற்றிவிட்டு என்னை இளைய ராஜாவுக்கு அறிமுகப்படுத்துவதாகக் கூறி கவிதையை வாங்கி வைத்துக் கொண்டிருக்கிறார் சார்...''

''அது சரிப்பா.... சாப்பாடு எங்கே முடிந்ததுன்னு சொல்லலையே?''

''அதே டைரக்டரோடுதான் சார். உங்களை மாதிரியே அவருக்கும் காரியத்தில் சாப்பாடு வந்தது. நீயும் சாப்பிடப்பா என்று வற்புறுத்தி உட்காரச்சொல்லிச் சாப்பிட வைத்தார். வடை, பருப்பு, பாயசம்னு வீட்டுச் சாப்பாடு ஸார்... ரொம்ப அமர்க்களமாக இருந்தது... ஒரு பிடி பிடிச்சேன்.....''

''அப்படியா....?'' என்று கேட்டு மெளிதாகப் புன்னகை புரிவார். 'அந்தப் புன்னகை, எங்கிட்டயே பொய் சொல்றியேப்பா' என்று கேட்கிற மாதிரி இருக்கும்.

''இருக்கட்டும்ப்பா... இப்போ என்கூட உட்கார்ந்து இன்னொரு முறை சாப்பிட்டால்தான் நான் சாப்பிடறது. இல்லைன்னால் எனக்கும் சாப்பாடு வேண்டாம்....''

''சார்.... சார்.... என்ன சார் இது. நான்தான் சாப்பிட்டாச்சு என்கிறேனே?''

''நான் மட்டும் இல்லைன்னு சொல்றேன். எனக்கும் ஒரு கம்பெனி கொடுன்னுதானே கூப்பிடறேன். வா. வந்து உட்காரு.''

எதிரில் அவனுக்கும் இலை போட்டுப் பரிமாறுவார். அவன் சாப்பிட முடியாதவன் மாதிரி நடித்துக் கொண்டே சாப்பிடுவதை ரசிப்பார். அதில் ஒரு லயம் தெரியும் அவருக்கு. கவிதை மயமாகத் தோற்றமளிக்கும். அவனிடம் ஒரு அலாதிப் பிரியம் தோன்றும். அபிமானம் ஏற்படும். கூடிய சீக்கிரம் இவன் ஆசைப்படுகிற மாதிரி ஒரு கவிதையாவது சினிமாப் பாடலாக வந்துவிட வேண்டும் என்று நினைத்துக்கொள்வார்.



"பாட்டுக் கச்சேரியின் பாதியில் எழுந்து போயிட்டீங்களே?"

"ஆமாம் அவர் பாட்டில் ரொம்ப 'மூட்' ஆகிவிட்டேன்".

—ஏ.வி.தேவன்.

அந்த ஒரு ஆசையின் காரணமாகவே அப்பாவோடும் அம்மாவோடும் சண்டையிட்டுக்கொண்டு ஊரை விட்டு ஓடிவந்திருக்கிறான். அவனுடைய அப்பா எங்கோ ஒரு சின்னக் கிராமத்தில் திருநெல்வேலிக்குப் பக்கத்தில் பட்டறை வைத்திருக்கிறார். இவனும் படிப்பை முடித்த கையோடு அந்தப் பட்டறை வேலைக்கு வந்துவிட வேண்டும் என்று எதிர்பார்த்தார்.

''எலே வாடா என் கூட.... எத்தனை நாளைக்கு நான் மட்டும் இரும்பைப் பிணப்பேன்? நீயும் வந்து தொழில் கத்துக்க வா.''

''வேணும்ப்பா... இந்த வேலை எனக்குச் சரிப்படாது. நான் வேறே வேலை ஏதாவது தேடிக்கிறேன்...''

''வேற வேலை தேடிக்கிறியா? ஏன்டா அப்போ பட்டறையை யார் கவனிக்கிறது?''

''நீங்கதான் இருக்கீங்களே அப்பா....''

''எனக்கப்புறம் யாரரா கவனிப்பாங்க?''

''அதை அப்புறம் பார்த்துக்கலாம்ப்பா.''

''அப்புறம் என்னடா அப்புறம்? இப்பவே சொல்லு. நீ பட்டறை வேலைக்கு வரப் போறியா இல்லையா?''

''எம்ப்பா... இத்தனை படிப்பு படிச்சுட்டுப் பட்டறை வேலை செய்யச் சொன்னு எப்படி?''

''பெரிய படிப்புப் படிச்சுக் கிழிச்சிட்டே. வெறும் பி. ஏ.வுக்கு என்னடா இவ்வளவு அலட்டல்? மரியாதையா என்னோட கிளம்பி வரப் போறியா இல்லையாடா?''

அப்போதைய சண்டையைத் தவிர்க்கக் கிளம்பிப் போனானே தவிர அவனால் அரை நாளுக்கு மேல் அங்கு தங்க முடியவில்லை. அப்பாவிடம் சொல்லாமலே வீட்டுக்கு வந்து, நெஞ்சில் துறுதுறுத்தகவிதை ஒன்றை எழுதி முடித்தபோது அவர் ஆக்ரோஷமாக ''எங்கேடி அவன்?'' என்று கத்திக்கொண்டே வீட்டுக்குள் நுழைந்தார். சாவதானமாக உட்கார்ந்து கவிதை எழுதுவதைப் பார்த்து இன்னமும் கோபப்பட்டு அந்தக் கவிதை நோட்டுப் புத்தகத்தைப் பற்றித் துண்டு துண்டாகக் கிழித்து எறிந்தார். ''பட்டறையில் வேலை கத்துக்கச் சொல்லிக் கூட்டிப் போனால் இருட்டுத்தனமாகத் திரும்பி வந்து பாட்டா எழுதறே? டேய்... இனிமேல நீ பேனாவைத் தொட்டே.... கையை ஒடைச்சுடுவேன். போய்ப் பிழைக்கிற வழியைப் பாருடா....''

சாயிரம் துண்டு துண்டாகத் தன் கனவுகளும், கற்பனைகளும் சுண முன்னால் சிதறிக் கிடப்பதைப் பார்த்து உதடுகள் துடிக்க, கண்களில் கண்ணீர் கரை கட்ட அவற்றைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு அப்பாவை நிமிர்ந்து பார்த்தான். அடி நெஞ்சிலிருந்து ஏதேதோ கேட்கக் கேள்விகள் துருத்திக்கொண்டு நின்றாலும் பயத்தில் வார்த்தைகள் வரவில்லை. கேட்டால் அவர் பெல்ட்டை உருவிக் கொள்வார். இன்னமும் ஒரு பத்து வயதுப் பையனை நடத்துகிற மாதிரி தன்னை நடத்துவது அவனுக்குப் பிடிக்கவில்லை. தான் இருபத்து மூன்று வயது நிறைந்த இளைஞன் என்பதை எடுத்துச் சொல்ல ஆசைப்பட்டான். அவரது பிடி

சுவை, மணம் நிறைந்த காபி எது?
ஜீவனுள்ள காபி எது?
நவீன முறையில் தயாராகும் காபி எது?
தமிழ் நாட்டின் தலை சிறந்த காபி எது?
என்ற விவரங்களை கம்ப்யூட்டர்லே
அலசச் சொன்னேனே, என்ன பதில் கிடைச்சது?

பதில்
இதுதான்
சார்!

நரசுஸ்
காபி...

ஜீவனுள்ள
ஒரே காபி!

# நரசுஸ் காபி

தெர்மலோ முறை காபி!

ADWAVE: NCC: 2597





**நரசுஸ் காபி கம்பெனி** சேலம் 636 007. கிளைகள்: தமிழ்நாடெங்கும்.

வாதத்தை, மூர்க்கத்தனத்தை வெறுப்பா தாகச் சொல்ல நினைத்தான்.

ஆனால் சொல்ல முடியவில்லை. அவர் இன்னமும் உயர்ந்த குரலில் உறுமினார்.

''ஏதோ ஆசைப்பட்டியே... ஒரே ஒரு பையன்தானேன்னு படிக்க வைச்சால் குடும்ப தொழிலைச் செய்ய மாட்டேன்னு அடம் பிடிக்கிறது? இதுதான்டா சோறு போடும். காலம் காலமாச் சோறு போட்டுக்கிட்டும் வர்றது. அதனால் ஒழுங்கா இதைக் கத்துக்கிட்டு நாலு காசு சம்பாதிச்சு குடும்பத்தை முன்னேற்றுகிற வழியைப் பாரு.'

அன்று தட்ட முடியாமல் போனான். மறு நாள், அதற்கு மறுநாள் என்று பட்டறை வாசலை மிதித்து, மூன்றும் நாள் யாருக்கும் தெரியாமல் பஸ் பிடித்து டவுனில் இறங்கி; ரயிலேறிச் சென்னைக்கு வந்து விட்டான். சென்னை வந்த பின்புதான் வாழ்க்கை அவனுக்குப் பிடிபட்டது. பணம்தான் சகலமும் என்பது தெரிய வந்தது. ஒரு கவிதை வெளியாவதும், சினிமாப் பாட்டாக மாறுவதும் சாதாரண காரியம் இல்லை என்பது புரிந்தது. கையில் இருந்த நூறு ரூபாய் பணம் நான்கே நாட்களில் செலவானதும் அவன் பசியிலும் பட்டினியிலும் வாடினான். என்ன ஆனாலும் மீண்டும் ஊருக்குப் போவதில்லை; ஒரு நல்ல நிலைமைக்கு வருகிறவரை அம்மா அப்பாவைச் சந்திப்பதில்லை என்கிற வைராக்கியம் உள்ளுக்குள் ஏற்பட பஸ் பிடித்து பெஸண்ட் நகரில் இறங்கி கடற்கரை மணலில் நடந்து நடந்து பசி மயக்கத்தில் அனந்தசாமியின் வீட்டு எதிரில் விழாமலிருந்திருந்தால் அவரைச் சந்தித்திருக்கப் போவதில்லை.

அன்றைய தினத்திலிருந்து அவன் அனந்தசாமியின் வீட்டில்தான் தங்கினான். அவனைப் பற்றின முழு விவரங்களைத் தெரிந்து கொண்ட அனந்தசாமி கவிதைகளையும் படித்துப் பார்த்த பின், திறமை மிகுந்த இந்த இளைஞன் முன்னுக்கு வரவேண்டுமென்று ஆசைப்பட்டார். தினமும் காலை ஏழு மணிக்கு அவன் வீட்டை விட்டுத் தன் கவிதை நோட்டுப் புத்தகத்தோடு கிளம்பினால் விளக்கு வைத்த பின் சோர்வும், அயர்ச்சியுமாகத் திரும்புவான்.

''சார், நீங்க கொடுத்தனுப்பின ஐந்து ரூபாயும் செலவாயிடுத்து சார். நாளைக்கும் ஒரு ஐந்து ரூபாய் கொடுத்துவிட்டுக் கணக்கில் எழுதிக்கோங்க. அப்புறமா நல்ல நிலைமை வந்ததும் திருப்பித் தந்துடறேன்.''

அவர் சிரித்துக் கொண்டே மறுநாளும் ஐந்து ரூபாய் கொடுத்து அனுப்புவார். அப்படிக் கொடுக்கிற பணத்துக்கு அவர் கணக்கு எதுவும் வைத்துக் கொள்ளவில்லை. கணக்கு பார்க்கிற விதமாகப் பழகவும் இல்லை.

அன்று மாலையில் ஆறுமுகம் மோட்டார் வேலை செய்யாததைத் தெரிவித்த உடனே அவர் சாயிராமைத்தான் தேடிக் கொண்டு போனார்.' அதற்குள் அவன் புறப்பட்டுப் போயிருக்கக் கூடாது என்ற கவலையுடன் அவனது அறை வாசலை அடைந்தபோது பூட்டின கதவுதான் வரவேற்றது. இனி மாலை ஆறு மணிக்கோ ஏழு மணிக்கோ தான் திரும்புவான்.

அதுவரை மோட்டாரைச் சரிபார்க்காமல் இருந்தால் இருக்கிற இரண்டு மூன்று அறைக்காரர்களும் கத்துவார்கள். ஏற்கெனவே பெஸண்ட்நகர் தள்ளியிருக்கிறது. தங்களின் வேலை செய்யும் தளத்துக்குப் போய் வருவது சிரமமாக இருக்கிறது என்ற காரணத்தினாலேயே ஒவ்வொரு அறையாகக் காலியாகி விட்டது. அடுத்த காரணம் வாய்க்கு ருசியாகச் சாப்பிட ஓட்டல்கள் இல்லை என்பது. இப்போது தண்ணீரும் இல்லையென்றால் தங்கியிருக்கிற நாலைந்து வாடிக்கைக்காரர்களும் அறையைக் காலி பண்ணிக்கொண்டு புறப்பட்டு விடலாம்...

அனந்தசாமி அவர்களின் . வாடகைப் பணத்தை நம்பி யிருப்பவர். காலையிலும் மாலையிலும் காபி தருவதோடு அறை வாடகைக்காக இருநூறு ரூபாய் வசூலிப்பவர். முன்பு அத்தனை அறைகளும் நிறைந்ததில் நிறையப் பணம் வந்தது. தற்போது சாயிராமைத் தவிர்த்தால் நான்கு அறைகளுக்காக எண்ணூறு ரூபாய்தான் கிடைக்கின்றன. அதில் இரண்டு வேளை சாப்பாடு தவிர கட்டிடப் பராமரிப்பையும் கவனித்துக் கொள்வது சிரமமாகத்தான் இருக்கிறது. இத்தனை சிரமங்களுக்கு இடையிலும் சாயிராமிற்காக முடிந்தபோதெல்லாம் ஐந்து, பத்து என்று கொடுத்தனுப்புகிறார். அந்த வயதில் தனக்கு ஒரு மகன் இருந்தால் செய்ய மாட்டோமா என்று நினைத்துக் கொள்கிறார்.

அப்படி ஒரு பரந்த மனசும்; பக்குவமும் வந்துவிட்ட காரணத்தினால் எதற்கும் பதற்றப்படாமலும், பயப்படாமலும் இருக்கிற வித்தையைத் தெரிந்து கொண்டிருந்ததால் அப்போதும் அவர் பதறவில்லை. நிதானமாக அடுத்து என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தபோது வாசலில் ஆட்டோ வந்து நிற்கிற சப்தம் கேட்டது. வராந்தாவுக்கு வந்து பார்த்தார்.—

சில்லறையை எண்ணிக் கொடுத்துவிட்டு ஒரு பெரிய சூட்கேஸுடன் இந்திரா கீழே இறங்கினாள்.

(தொடரும்)



அமெரிக்காவில் இறப்புக்களைவிட விவாகரத்துக்களே அதிகமாக நடைபெறுகின்றன. ஒரு மணி நேரத்தில் அங்கு ஒன்பது பேர் இறக்கின்றனர் ஆனால் இருபத்தாறு பேர்கள் விவாகரத்து செய்து விடுகின்றனர்.

—தகவல் ஜா. ரவி
ஆதாரம்: கரண்ட் நியூஸ்.

## RAJAJI'S WORLD OF LITERATURE

The best way to remember Rajaji, one of the greatest sons of India, is to read his books and translate his ideas into action.
Here are some books by Rajaji published by Bhavan offered at concessional rates.

| TITLE | PRICE |
| --- | --- |
| MAHABHARATA | 15-00 |
| RAMAYANA | 15-00 |
| STORIES FOR THE INNOCENT | 15-00 |
| KURAL—THE GREAT BOOK OF TIRUVALLUVAR | 12-00 |
| OUR CULTURE | 5-00 |
| RAJAJI'S SPEECHES Vol. I | 12-00 |
| RAJAJI'S SPEECHES Vol. II | 13-00 |
| BHAJAGOVINDAM | 6-00 |
| UPANISHADS | 7-00 |
| AVVAIAR (THE GREAT TAMIL POETESS) (H.B.) | 4-00 |
| RESCUE DEMOCRACY FROM MONEY POWER (P.B.) | 8-50 |
| RESCUE DEMOCRACY FROM MONEY POWER (H.B.) | 20-00 |

**TERMS**

1. 20% discount on all books
2. On orders for Rs. 50/- and less, Rs. 5/- postage extra.
3. Free delivery by post within India on orders for over Rs. 50/-.
4. Full advance (M.O. / Bank Draft) to be sent with each order.
5. This offer is valid upto 31st JANUARY, 1985 only.

Please write to:

**ASSISTANT REGISTRAR**

Book Sales Division

Bharatiya Vidya Bhavan, Kulapati Munshi Marg Bombay-400 007



## பக்தி பத்திரிகைகள் இலவசம்

எமது ருசிகரமான **இனிப்பு** அல்லது **கார பண்டங்களை** மூன்று கிலோவுக்கு குறையாமல் வாங்குவோருக்கு **பக்தி நூல்கள்** அல்லது தெய்வீக பத்திரிகைகளில் ஒன்று (ஒரு வருட சந்தா) இனாமாக வழங்கப்படும்.

**இனிப்புகள்:** பாதாம் அல்வா, கோதுமை அல்வா, குலாப் ஜாமூன், மைசூர்பாகு, ஜாங்கிரி, முந்திரி கதலி, தேங்காய் போளி, சொஜ்ஜி அப்பம், பொரிவிளங்காய் உருண்டை, காசி அல்வா, மாலாடு முதலியன.

**காரம்:** மிளகு வடை, முத்துசரம், தேன்குழல், காராசேவ், கைமுறுக்கு, சீடை, தட்டை, சோமாஸ், சாம்பார் பொடி, ரஸப்பொடி, பருப்புப்பொடி, இட்லிபொடி முதலியன.

**திருமண வைபவங்களுக்கு,** சீர்முறுக்கு, பருப்புத் தேங்காய், அதிரசம், திரட்டுப்பால், காப்பரிசி, வறுபயறு ஆகியவற்றைத் தயாரித்து தருகிறோம்.

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் அண்டு ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு, சென்னை-600 020

போன்: 412557

காமதேனு கூட்டுறவு சிறப்பங்காடி, தேனாம்பேட்டை, சென்னை

# அப்பாவுக்கு அதிருப்தி; கணவருக்குக் கோபம்!

4

**வா**ழைக் கன்று கிழிந்து தொங்கும். வாசற் கோலம் கலைந்திருக்கும். பட்டுப் புடவையை விழுத்துவிட்டுப் பழைய புடவைக்கு மாறிவிட்ட பெண்கள் முகத்தில் அலங்காரமும் கண்களுக்குள் சந்தோஷமும் மிச்சம் இருக்கும். கட்டுச்சோற்றுக் கூடையைச்சுற்றிக் கட்டின வேட்டி சலவை வெள்ளையில் சிரித்திருக்க வாழை இலை நுனி வதங்கி இடைவெளியில் எட்டிப் பார்க்கும். கரி படிந்த பாத்திரத்தைக் கைவண்டி முதுகில் ஏற்ற வந்த பரிசாரகன் காரணமின்றிக் கல்யாணப் பெண்ணைப் பார்த்துச் சிரிப்பான். உள்ளே ஒரு தாம்பாளம் ஓசையுடன் கீழே விழுந்து மனைக்குள் எதிரொலிக்கும். சத்திரம் காலியாகும். சுற்றங்கள் விடைகொள்ளும். கல்யாணம் முடிந்துவிட்டது. வாழ்க்கை ஆரம்பம் ஆகிறது.

இப்படித்தான் இந்தத் தேசம் சுதந்திரத்தை எதிர்கொண்டது. கொண்டாட்டமும் கூடவே ரகளையும். அலங்காரமும் அதன் கூடவே கிழிசலுமாய். அர்த்தம் இல்லாத சிரிப்பும் காரணமில்லாத கவலையுமாய். கல்யாணம் முடிந்த சந்தோஷமும் வாழ்க்கை துவங்குகிற பயணமுமாய்.

உலகம் உறங்கின ஒரு நள்ளிரவில் தேசம் விழித்துக் கொண்டது. சும்மா வருமா சுதந்திரம்? தேசத்தைக் கூறு போட்டுக் கொண்டு வந்தது. துண்டுபட்ட தேசம் கண்டு கொந்தளித்தது வெகுஜனம். சொர்க்கத்திற்கு வழிசொன்ன மதங்கள் வாழ்க்கையை நரகமாக்கின. துண்டு விழுந்த தேசத்தைக் கையில் எடுத்துக் கொண்டது காங்கிரஸ் கட்சி. பிரிட்டிஷ்காரன் விட்டுப் போன நாற்காலியில் பிரதமராய் உட்கார்ந்து சேவகம் பண்ண நேருவை அழைத்தது.

அப்பா பிரதமராகிவிட்டார். இந்திராவின் வாழ்க்கை இனிமேல்தான் ஆரம்பம் ஆக வேண்டும். கல்யாணம் ஆகிக் காப்புக் கட்டின கையோடு ஜெயிலுக்குள் போயாயிற்று. இனிமேல்தான் குடித்தனம் வைக்கவேண்டும். கணவனும் மனைவியுமாய் வாழ்க்கையைத் துவக்க வேண்டும்.

பெரோஸ் காந்தி பத்திரிகையைத் துவக்கினார். நேஷனல் ஹெரால்ட். லக்னோவில் ஆபீஸ். எழுதுகிற ஆர்வம் பெரோஸிற்கு உண்டு. ஆனால் பத்திரிகை என்பது எழுதுவதுமட்டுமல்ல. தொழில் கற்றுக்கொள்ள மாப்பிள்ளையைச் சரியான இடத்திற்கு அனுப்ப நினைத்தார் நேரு. அவருக்கு இருந்த தொடர்புக்கும் பிரதமர் என்ற செல்வாக்கிற்கும் உலகின் எந்த மூலைக்கும் பெரோஸை அவர் அனுப்பியிருக்க முடியும். ஆனால்—

அவர் தேர்ந்தெடுத்த இடம் சென்னை. அந்தப் பத்திரிகை இந்து.

"இந்துப் பத்திரிகையை நினைக்கும்பொழுதெல்லாம் எனக்கு ஒரு கௌரவமான மூதாட்டி ஞாபகம் வருகிறது. குறும்பான வார்த்தைகள் தற்செயலாக உதிர்க்கப்பட்டால்கூடத் திடுக்கிட்டுப் போய்விடுகிற மூதாட்டி. வாழ்க்கையில் சௌகர்யமாக

○ ப்ளூரஸி நோய்வந்து அவதிப்பட்டவள் நீ: குழந்தைகள் பெற்றுக்கொள்ளக்கூடாது" என்ற டாக்டர்கள் அறிவுரையை இந்திராவால் ஏற்க முடியவில்லை... படத்தில் மகன்கள் ராஜீவ், சஞ்சயுடன் இந்திரா





○ விருந்தினரை வரவேற்று உபசரிக்கும் பிரதம மந்திரி இல்லத்தில் ''ஹோஸ்டஸ்'' என்ற முறையில் இந்திராவின் பணி தேவைப்பட்டது. படத்தில் பிரதமர் நேரு, இந்திரா, வல்லபாய் படேல்

செட்டில் ஆகிவிட்ட பூர்ஷ்வாக்களுடைய பத்திரிகை அது.''

என்று 'செல்லமாக' 'இந்து'வைப் பற்றி தம் சுயசரிதத்தில் குறிப்பிட்டிருந்தாலும் அதன்மீது நிறைய மதிப்பும் அதனுடன் உறவும் வைத்திருந்தார். 1927ல் ரஷ்யாவுக்குச் சென்றுவிட்டு வந்த தம் அனுபவங்களைப் பிரத்தியேகமாக இந்துவில் எழுதி வந்தார் நேரு. அதன் பின்னரும் அவ்வப்போது அதில் கட்டுரைகள் எழுதிவந்தார். இந்துவில் இடம் பெறாத நேருவின் கட்டுரைகளே கிடையாது என்றுகூடச் சொல்லி விடலாம். இந்தியப் பத்திரிகைகளிலேயே செய்தியும் அமைப்பும் சிறப்பாக அமைந்த பத்திரிகை இந்து என்பது நேருவின் நம்பிக்கை.

எனவே இந்தப் பத்திரிகையில் பெரோஸ் காந்தியைப் பயிற்சிக்கு அனுப்பி வைத்தார். பயிற்சிக்குப் பிறகு நேஷனல் ஹெரால்ட் லக்னௌவில் உருவாயிற்று. அதன் ஆசிரியர் பொறுப்பை பெரோசும், நிர்வாகப் பொறுப்பை இந்திராவும் ஏற்றார்கள். ஆரம்பித்த புதிதில் அதற்கு வெளி நாட்டில் நிருபர்கள் இல்லை. இந்துவின் வெளிநாட்டு நிருபர்கள்தான் அதற்கும் செய்திகள் அனுப்பும்படி கேட்டுக் கொள்ளப்பட்டார்கள்.

''டியர் மிஸஸ் காந்தி! என்னுடைய ஆறும் தேதிக் கடிதத்தின் தொடர்ச்சியாக இதை எழுதுகிறேன். நியூயார்க்கிலும் லண்டனிலும் இருக்கும் எங்களுடைய பத்திரிகையாளர்களிடம் உங்களுடைய பத்திரிகைக்கும் செய்திகள் அனுப்பும்படி பணித்திருக்கிறேன். இந்தச் செய்திகள் தினமும் மதியம் பனிரெண்டு மணிக்கு மேல் நேரடியாக, டெலிப்பிரிண்டர்கள் மூலம் பழைய மில் சாலை புதுதில்லி விலாசத்தில் உள்ள எங்கள் ஆபீசிற்கு அனுப்பப்படும். அவற்றை அங்கிருந்து பெற்று லக்னௌவிற்கு அனுப்பும் ஏற்பாடுகளைச் செய்துகொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன். — கஸ்தூரி ஸ்ரீநிவாசன்'' என்று இந்து ஆசிரியர் இந்திராவுக்குக் கடிதங்கள் எழுதினார்.

அரசாங்க வேலையே முழு மூச்சாக இருந்த நேருவுக்கு வீட்டைக் 'கவனித்துக்கொள்ளப் பொறுப்பான ஓர் ஆள் வேண்டியிருந்தது. வெளி நாட்டு விருந்தினர்கள், அரசாங்க விருந்துகள் இவற்றை நிர்வகிக்க விவரம் தெரிந்த அனுபவம் வாய்ந்த ஆள் வேண்டும். ''ஹோஸ்டஸ்'' எனப்படும் இந்த உத்தியோகத்திற்குச் சம்பளம் கிடையாது. வெளியில் இருந்து ஆள் எடுக்கும் வழக்கம் இல்லை. தலைவருடைய மனைவியே இந்தப் பணியை மேற்கொள்வது மரபு. மனைவி இல்லாத நேரு மகளைத் தில்லிக்கு வந்துவிடும்படி அழைத்தார்.

ஆபீஸ் வேலையை விட்டு விட்டு அரசாங்க வீட்டில் மாப்பிள்ளையாகத் தங்கப் பிடிக்கவில்லை பெரோஸிற்கு. அநேக இந்தியப் பெண்களைப் போல, அப்பாவிற்கும் கணவனுக்கும் இடையில் அலைக்கழிக்கப்பட்டார் இந்திரா. லக்னௌவில் காலையும் தில்லியில் தலையையும் காண்பிப்பது வழக்கமாயிற்று. இரண்டு ஊருக்கும் இடையில் இருநூற்று எழுபது மைல். இங்கே கொஞ்ச நாளும்

அங்கே கொஞ்ச நாளுமாய் மாதங்கள் நகர்ந்தன. கணவனுக்குக் கோபம். அப்பாவுக்கு அதிருப்தி. எனக்கு மனைவியா, தகப்பனுக்குப் பொண்ணு தீர்மானித்துக்கொள் என்று உறுமினுர் பெரோஸ். வார்த்தைகள் பொரிந்தன. உறவுகள் விரிசல் கண்டன.

"குழந்தை வேண்டாம் இந்திரா. அது உன்னைக் கொன்றுவிடும்" என்ருர் டாக்டர்.

தூக்கி வாரிப் போட்டது இந்திராவுக்கு.

"ஏன் டாக்டர்?"

"உன்னுல் முடியாது."

"அதுதான் ஏன்?"

"பிரசவ வேதனையைத் தாங்க உன் உடம்பில் தெம்பில்லே. ப்ளுரசி நோய் அதைச் சீர்குலைத்துவிட்டது."

'முடியாது' என்ற வார்த்தை இந்திராவை உசுப்பிற்று.

"முடியாது என்று உண்டா? மலை ஏறுகிறவனை நினைத்துப் பார். எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் சிரமம். மூச்சு முட்டும். பனி அடிக்கும். நிமோனியா வருகிற அபாயம். என்ருலும் அவன் ஏறுகிருன். அவனை மலையேறச் சொல்லி யாரும் வற்புறுத்தவில்லை. இத்தனை துன்பத்திற்கு யாரும் சம்பளம் தருவதில்லை. என்ருலும் அவன் ஏறுகிருன். ஏன்? அது அவனுடைய சந்தோஷம். அத்தனை சவால்களுக்கிடையில் தன் மனமும் உடம்பும் பிரமாதமாய் இயங்குவதை உணர்கிற சந்தோஷம். முடியாது என்று மற்றவர்கள் கைவிட்டதை ஜெயிக்கிற சந்தோஷம்."

கல்லூரி நாட்களில் அப்பா எழுதிய கடித வரிகள் காதில் ஒலித்தது.

முடியும். என்னுல் முடியும். என்னுலும் குழந்தை பெற முடியும்.

இந்திராவின் மனம் இறுகிற்று.

(தொடரும்)



## அருள்வாக்கு

வரவு செலவு என்பது பணம் ஒன்றில் மட்டுமில்லே. எல்லாவற்றிலும் உண்டு. நாம் வார்த்தையை அதிகம் விட்டால் எதிராளியிடம் வாங்கிக் கட்டிக்கொள்கிருேமே, இதுகூட வரவு செலவுதான். நாம் வாயால் விட்டது செலவு; வாங்கிக் கட்டிக் கொள்வது வரவு. நாம் அனவரதமும் தூங்கும் போதும்கூடப் பண்ணுகிற காரியம், மூச்சு விடுவது. அதுகூட வரவு செலவு தான். காற்றை உள்ளே வாங்கிக் கொண்டு வெளியே விடுவது வரவும் செலவும்தான். இதில்கூடக் கணக்கு வேண்டும் என்றுதான் பிராணுயாமம், மந்திர ஜபம், ஸோஹம், தியானம் என்று பல யோகங்களை வைத்திருப்பது. புஸுக் புஸுக்கென்று வேகமாக சுவாசித்தால் ஆயுசும் குறையும். ஆத்மா சுத்தப்பட்டுச் சாந்த நிலைக்கு வருவதற்கான நாடி சமனமும் ஏற்படாது. அதனுல் மூச்சைக் கணக்காக விடணும் என்று வைத்திருக்கிருர்கள். ஒரு நாளைக்கு 21,000 ச்வாஸமே விடணும் என்று கணக்கு. அதாவது ஒரு ச்வாஸத்துக்கு நாலு செகண்ட் ஆக வேண்டும். 'நாம் அவசரமாகக் காரியம் செய்யும்போதும், கோப தாபத்திலும் காமம் முதலிய உணர்ச்சி வேகங்களிலும் புஸ் புஸ் என்று ஒரு செகண்ட் இரண்டு செகண்ட்லேயே ஒரு ச்வாஸம் முடித்துவிடும். அதற்காகத்தான் ஈடு கட்ட இன்னொரு எக்ஸ்ட்ரீமில் அதிக நேரம் தீர்க்கமாக மூச்சை இழுத்து அடக்கி வைத்து நிதானமாக விட்டுப் பிராணுயாமம் பண்ணச் சொல்லியிருப்பது. ஆக இந்த சரீரத்துக்கான ஆயுள் சரீரத்துக்குள்ளே இருக்கிற ஆத்மாவின் நிறைந்த சமநிலையான சமாதி நிலை இரண்டுமே மூச்சு ஒரு கணக்காயிருப்பதில்தான் அடங்கியிருக்கிறதென்று தெரிகிறது.

வெளியில் காட்டுகிற அக்கௌண்ட்டில் ஆட்டைத் தூக்கி மாட்டில் போட்டு ஸரிக்கட்டினதாகக் காட்டிவிடலாம். ஆனுல் நமக்கு நாமே accountable ஆக இருக்க வேண்டும் என்கிருர்களே, அதில் எந்தத் தகிடுதத்தமும் செய்து ஜயிக்க முடியாது. நாம் செய்கிற அத்தனையையும் கர்மஸாக்ஷியாக ஒருத்தன் பார்த்துக் கொண்டிருக்கிருன். அவனை ஏமாற்றவே முடியாது.

- ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி
சங்கராசார்ய ஸ்வாமிகள்

தெய்வத் திருவருள் பெற இரண்டு காசிகள் !

வடக்கே ஒரு காசி-வாரணாசி !

தெற்கே ஒரு காசி-தென்காசி !!

539 ஆண்டுகளுக்கு முன்னரே அரிகேசரி

பராக்கிரம பாண்டியன் கட்டிய திருக்கோவில்

தென்காசி

அருள்தரும் **உலகம்மன்**

# காசிவிசுவநாதசுவாமி



ஆலயத்தில், குறைபட்ட கோபுரத்தை நீக்கிப் புதிய

# இராஜகோபுரம் கட்டும் திருப்பணி

28-11-84 முதல் துவங்கிவிட்டது.

இத்திருப்பணிக்கு ரூபாய் 90 லட்சம் வரை செலவாகும் எனக் கணக்கிடப் பட்டிருக்கிறது. பொதுமக்கள் வழங்கும் நன்கொடைத் தொகைகளுக்கு இந்திய அரசின் நிதி இலாகா அறிவிக்கை எண் : 4922 எஃப் 176/26/86 ஐ.டி (ஏ.ஐ) நாள் 22-9-82-ல் வருமானவரி விலக்கு பெறப்பட்டுள்ளது.



இத்திருப்பணி நிறைவுற பக்தர்கள் வாரி வழங்கி அருள் ஆசி பெற வேண்டுகிறோம்.

பா. சிவந்தி ஆதித்தன்,
தலைவர்,
அருள்தரும் உலகம்மன்,
காசிவிசுவநாத சுவாமி
திருக்கோயில் திருப்பணிக்குழு,
தென்காசி,
திருநெல்வேலி மாவட்டம்.

EP-KVT-101

## 8

## இரகசிய உடன்படிக்கைக் குழு

வீர்மன் அந்தத் துணிக் கூடாரத்துள் வந்ததிலிருந்து அடுத்த சில நாழிகைகளில் காரியம் யாவும் கண்கட்டு வித்தை போல் நடந்தன.

அவன் எப்படி இயங்கினான் என்பது ஆச்சரியமாக இருந்தது.

இதுபோன்ற ரத்தக் களறிகளில் அவன் இறங்கியதில்லை.

ஒரு பெண்ணும் இதில் சம்பொறுப்போடு ஈடுபடுவாள் என்பது தெரியாது.

இருவரும் சேர்ந்து ஆறு பேர்களை மேல் உலகம் அனுப்பியது ஒருவிதத்தில் சங்கடமாகக் கூட இருந்தது.

ஐந்து வீரர்கள், ஒரு தாதிப் பெண் ஆகிய ஆறு சடலங்களைத் தடாகத்தில் ஓசைப்படாமல் நழுவ விட்டபிறகு—

ஆசுவாசமாகி அவன் அந்த மேட்டில் அமர்ந்தான்.

நள்ளிரவு தாண்டியிருக்கும். எங்கும் சலனம் இல்லாத நிசப்தம் பனிபோல் படர்ந்திருந்தது. உலகம் அனைத்தும் ஜடம் ஆகிவிட்ட தோற்றம். மூச்சை இழுத்துவிட்டு, வெற்றுப் பார்வையாகப் பார்த்துக்கொண்டிருந்தான் அவன்.

''...கொந்தளிப்புகள் அதிகம் பார்த்திருக்கமாட்டீர்கள்!''

''எங்களுக்கும் சண்டை பூசல் உண்டு!'' என்றான் வர்மன் ஆத்திரத்தோடு. ''ஆனால் இந்த மாதிரி அநியாயத்துக்கு...''

''அநியாயம் என்று எப்படித் தெரியும்?''

''நீங்கள் சொன்னீர்கள்! நான் கொன்றேன்.''

''நான் சொன்னால் செய்யலாமா?''

''இல்லாவிட்டால் உங்களுக்கு ஆபத்து என்று எண்ணினேன்.''

சிந்து வெறுமையாகப் பார்த்தாள். ஒரு முறுவலோ, புன்னகையோ முகத்தில் வரவில்லை.

''ஐயா வீரரே! நீங்கள் பாளையக்காரர்களாயிற்றே? யாருக்கு வரி கட்டுகிறீர்கள்?''

''ஏன், மதுரை நாயக்கர்களுக்கு?''



# மோகினி திருக்கோலம்

''அரிய உதவி செய்தீர்கள்'' என்ற குரல் கேட்டதும் திரும்பிப் பார்த்தான். சற்று அப்பால் உள்ள கல்லில் சிந்து இளைப்போடு அமர்ந்தாள்.

பின்னிரவுக்கு உண்டான ஒரு மினுமினுப்பு எங்கும் உதிர்ந்திருந்தது.

சொப்பனத்துக்குள் இருந்து பார்ப்பது போல் ஒரு பிரமை தட்டியது.

''ஏன் இதைச் செய்தீர்கள் அம்மணி! எனக்கு வேதனையாக இருக்கிறதே!'' என்றான் வர்மன்.

''வீரரே! உங்களுக்கு உலக நடப்புத் தெரியுமா?'' என்றாள் சிந்து அழுத்தமாக.

''நிச்சயம் தெரியாது. தெரிந்திருந்தால் இப்போது நடந்த காரியத்தில் இறங்கியிருக்கமாட்டேனோ என்னவோ!''

''இல்லை, நிறைய இறங்குவீர்கள்!''

''அப்படியா?''

''ஆமாம். தென்பாண்டி நீங்கள்! பாளையக்காரர்களின் கோட்டை! வடக்கில் உள்ள எங்களைப் போல யுத்தங்கள், கலவரங்கள்,

''நாயக்கர்கள் யாருக்கும் கப்பம் கட்டுகிறார்களா?''

அவனிடம் மறுமொழி இல்லை.

''கேட்டுக்கொள்ளுங்கள்! நாயக்கர்கள் ஆர்க்காட்டு நவாபுக்குக் கப்பம் கட்டுகிறார்கள்!'' என்றாள் சிந்து.

''அப்படியா?''

''ஆமாம்! ஆர்க்காடு நவாபு நைஜாமுக்குக் கப்பம் கட்டுகிறார்!''

''நைஜாம்!''

''டில்லி முகலாய பாதுஷாவுக்கு!''

''ஓ!''

''நாம் எல்லோருமே டில்லி பாதுஷா ஆட்சிக்கு உட்பட்டவர்கள்!''

சிரித்தான், வர்மன்.

''நாங்கள் இல்லை'' என்றான் அவசரமாக.

''நடைமுறையில் இல்லாமல் இருக்கலாம். ஒரு நாயக்கரோ, ஒரு நவாபோ ஒரு நைஜாமோ பலவீனர் காரணமாக உங்களை விட்டு வைத்திருக்கலாம். ஆனால் பூசல் என்று வந்தால் உங்களை ஒடுக்கிவிடுவார்கள்!''



''நாங்கள் நாயக்கர்களுக்கு உடன்பட்டவர்கள். வேறு எந்த முஸ்லீம் அரசருக்கும் உடன்படோம்.''

''உன்னதப் பற்று! அதற்காகவே நாங்கள் பாளையக்காரர்களை மதிக்கிறோம். ஆனால் இப்போது நாயக்க வம்சத்தார் மதுரையை ஆளவில்லை தெரியுமா?''

''ஆளாவிட்டால் நாங்கள் கப்பம்செலுத்த மாட்டோமே!''

''பலரும் செலுத்துவதில்லை தெரியும்! ஆனால் நாயக்கர்கள் என்ன ஆனார்கள் தெரியுமா?''

''தெரியாது!''

''அதனால்தான் உங்களை வெருளி என்றேன்!''

''ஏகோ தெரிய வேண்டுமோ? மங்கம்மாளைத் தெரியும். மீனாட்சியைத் தெரியும்.''

''இரண்டு பேருமே இறந்து விட்டார்கள்''

''தெரியும்.''

''கடைசியாக மதுரையை ஆண்ட நாயக்க வம்சத்தவர் ராணி மீனாட்சிதான்.''

''ஓ!''

''அவர் இறந்து பத்து வருஷம் ஆகிறது. நயவஞ்சகமாகச் சிறைவைத்துக் கொல்லப்பட்டாள் அவள்!''

சிந்து ஆத்திரத்தோடு சொல்ல, அவன் நிமிர்ந்து பார்த்தான்.

''யார் சிறைவைத்தது?''

''இக்க சந்தா சாகிப்.''

''ஆர்க்காடு நவாபா?''

''ஆமாம்! ஒரு கோடி ரூபாய் மீனாட்சியிடமிருந்து வாங்கி, ராணிக்கு உதவி செய்கிறேன் என்று சொன்னார். சத்தியம் செய்தார். ஆனால் வஞ்சகமாக, மீனாட்சியின் படைகளையெல்லாம் தம் கைக்குக் கொண்டு வந்துவிட்டு அவளைச் சிறையில் தள்ளி விட்டார்!''

''ஒரு பெண்மணியையா?''





''பெண்மணி மட்டுமல்ல! நாயக்க வம்சத்துக் குலவிளக்கு அவள்! கணவர் இறந்தவுடன் ராஜ்யத்தை ஏற்று, பல சூழ்ச்சி, தந்திரங்களுக்குச் சவால் கொடுத்துச் சமாளித்து வந்திருக்கிறாள் அவள்! அந்த மகாராணியை சந்தா சாகிப் வஞ்சகமாகச் சிறையில் தள்ளி விட்டார்!''

''அப்புறம் என்ன ஆயிற்று?''

''ராணிக்கு அது தரிக்குமா? வஞ்சிக்கப்பட்டோமே என்று மனம் நொந்தாள். விஷம் அருந்தி இறந்துவிட்டாள்.''

''வருத்தமாக இருக்கிறதே!''

''விஷம் அவராக அருந்தினாரா அல்லது வலுக்கட்டாயமாகக் கொடுக்கப்பட்டதா என்பது பெரிய கேள்வி. ஏனெனில் மீனாட்சி சிறையில் இருந்தால் நிச்சயம் உங்கள் பாளையக்காரர்களும், மறவர்களும் நத்தம் கள்ளர்களும் கொந்தளித்து எழுந்து மீனாட்சியை மீட்டு, திரும்பவும் ராணியாக்கி விடுவீர்கள் என்று நவாப் நிச்சயம் பயப்பட்டிருப்பார். அதன் காரணமாக அவர் என்னவேண்டுமானாலும் செய்திருக்கலாம்.''

''சரி! ஏதோ விதமாக விஷம் அருந்தும் நிலை அவளுக்கு ஏற்பட்டது. இறந்துவிட்டாள்! இதை ஏன் இப்போது சொல்கிறீர்கள்?''

''அந்த மரணத்துக்குப் பழி வாங்க வேண்டும்.''

வார்த்தைகளைக் கனமாக அழுத்திச் சொல்லிக்கொண்டு சிந்து எழுந்து நின்றாள்.

உடம்பு படபடக்க அருகில் நெருங்கிய மாமரக் கிளை ஒன்றைப் பற்றிக்கொண்டாள்.

''என்னது? பழியா? இப்போதா?''

''ஆமாம்! பழிக்குப் பழி!'' என்று சீறினாள் சிந்து.

''என்ன செய்ய வேண்டும்?''

''சந்தா சாகிப்பைக் கொல்ல வேண்டும்.''

வர்மன் நிமிர்ந்து பார்த்தான்.

''ஆமாம். அபலை மீனாட்சியைக் கொன்றவரை நாம் கொல்ல வேண்டும்.''

சிந்துவைக் கவனித்ததில் வழக்கமாக அவள் தனது உணர்ச்சிகளை மறைக்கக் கூடியவள் என்று தெரிந்தது. ஆனால் இப்போது அவளையும் மீறி அந்த வார்த்தைகள் பருமனான கனத்தோடு வெளி வீழ்ந்தன.

கண்களில் உணர்ச்சி எழ, வர்மன் எழுந்து நின்றான்.

''அதுதான் உங்கள் குறிக்கோளா?''

''அது மட்டுமல்ல! நாயக்கர் ஆட்சி மீண்டும் வரவேண்டும். இது என் குறிக்கோள் மட்டுமல்ல வீரரே! பெரியபாளையக்காரர்கள், மறவர்கள், நத்தம் ஆட்சியாளர்கள் எல்லோருடைய விருப்பமும் இது. இதற்காக ஒரு ரகசிய உடன்படிக்கை குழு ஆரம்பித்திருக்கிறார்கள்.''

''எல்லோரும் சேர்ந்தா?''

''ஆமாம். பாளையக்காரர்களில் ஐம்பத்திரண்டு பேர், மறவர், கள்ளர் குலத் தலைவர்கள் எல்லோருமே இதில் இருக்கிறார்கள். ரத்தத்தைச் சிந்திக் கையெழுத்துப் போட்டிருக்கிறார்கள். திரும்பவும் நாயக்கர் ராஜ்யத்தைக் கொண்டு வருவது என்று!''

''நாயக்கர் வம்சத்தில் யாராவது இருக்கிறார்களா?''

''விஜயகுமாரன் இருக்கிறார்!''

''யார் அவர்?''

''மீனாட்சி ராணியின் சுவீகாரப்புத்திரர்!''

''எங்கே இருக்கிறார்?''

''சிவகங்கைக் காடுகளில்!''

''அப்படி ஒரு நிலை எழுந்ததா?''

''அந்த எழுத்தைத்தான் மாற்ற வேண்டும் பாளையக்காரரே!''

வர்மன் அவளை ஏறிட்டுப் பார்த்தான்.

அவள் முகம் வெண்கலமாக இறுகி, கண்களில் உக்கிரம் கூடியிருந்தது.

''அப்படியானால்...'' என்று இழுத்தான் அவன். ''தாங்கள் யார் அம்மணி?''

ஒரு கணம் தள்ளியே அவள் மறுமொழி வந்தது.

''நான் ஒரு தேவதாசி!'' நிறுத்தினாள் அவள்.

வர்மன் அவளைக் கூர்மையாகநோக்கினான்.

''மீனாட்சியின்அந்தப்புரத்தில் என தாயார் இருந்தாள். நானும் இருந்தேன்.''

''உங்களுக்கு ஏன் இதில் ஆர்வம்?''

''எனக்கா? நான் ஒரு மானமுள்ளபிரஜை. சொந்த ராஜ்யத்தையும், சொந்த ராஜ குடும்பத்தையும் கண்ணாக மதிப்பவள். உடன்படிக்கைக் குழுவில் நானும் ஒரு கையெழுத்துக்காரி!''

''நல்லது'' என்றான் அவன். மேலே பேசவில்லை.

சிறிது நேரம் மௌனம்.

பிறகு சிந்து திரும்பி, ''நீங்கள் நாயக்கர் வம்சத்தைத்தானே விரும்புகிறீர்கள்?'' என்றாள்.

''நான் பாளையக்காரன்! என் விசுவாச ரத்தம் அப்படித்தான் நினைக்கும்.''

''அப்படியானால் சபதம் எடுப்பீர்களா?''

''என்ன சபதம்?''

''இந்தத் தென்னாடு முழுவதிலும் நாயக்கர் வம்சத்தார் ஆட்சிபுரிய வேண்டும். அதற்காக நான் உயிருள்ளவரை போராடுவேன். எந்தத் தியாகம் வேண்டுமானாலும் செய்வேன்.''

''இதுதான் சபதமா?''

''ஆமாம்!''

வர்மன் அந்த வார்த்தைகளை நினைவில் பதித்தான்.

பிறகு மெதுவாக, ஒவ்வொரு வாக்கியமாகக் கூறி, ''செந்திலாண்டவன் மீது சத்தியம்'' என்று கூறிக் கையில் அடித்துக் கொண்டான்.

பிறகு நிமிர்ந்தபோது அவன் கண்கள் சிறிது பனித்திருந்தன.

''சரி! இன்னும் அரை ஜாமத்தில் புறப்படுகிறோம்!'' என்றாள்.

''எங்கே?''

''வடக்கே!''

''ஏன்?''

''நமக்கு உதவி வேண்டாமா?''

''திருப்பதிக்கா? பணம் பெறுவதற்கா?''

அவன் மறுமொழி கூறவில்லை. அதற்குள் அந்தப் பெரும் ஓசைகள் அங்கிருந்த நிசப்தத்தைக் கலைத்தன.

தாதி ஒருத்தி ஓடிவந்துகொண்டிருந்தாள்.

(தொடரும்)













## அமிர்தாஞ்சன் அறியும் உடல்வலி மற்றும் சுளுக்கின் கடுமையை

எளிதாகப் பூசிட ஏற்ற மிருதுவான அடிப்படைபொருள் கொண்டது.

புத்தம் புதிய, கார்க்கினாலான உள் அமைப்பு மருந்தின் சக்தியைப் பாதுகாக்கிறது.








1984 ஒலிம்பிக் போட்டி இந்திய விளையாட்டு வீரர்களுக்கு பெய்ன்-பாம் சப்ளை செய்ய அங்கீகாரம் பெற்றவர்கள்

# அமிர்தாஞ்சன்

துரித நிவாரணம் உறுதியுடன் அளிப்பது.

தீய பின்விளைவுகள் இல்லாதது.

OBM 8771 TM

**என் 'பங்கு'க்கு...**

தொழில், வர்த்தக சம்பந்தமான பத்திரிகைகளை அலசிப் புகழ் பெற்ற நிறுவனங்களைப் பற்றித் தெரிந்து கொண்டு அவை புதிதாக பங்குகளை விற்கும்போது அவற்றுக்கு மனுச் செய்தும், பங்குச் சந்தையில் தரகர்கள் மூலம் பங்குகளை விற்றும், வாங்கியும் வீட்டிலிருந்தபடியே பணம் சம்பாதிக்கிறேன்.

**எஸ். பூங்கொடி ரங்கசாமி, ஈரோடு**

**பொழுது போகிறது, பணம் வருகிறது**

அருகில் குடியிருக்கும் நண்பர் எல். ஐ. சி.யில் ஆபீசர். அவர் கூறியதன் பேரில் எல். ஐ. சி. ஏஜென்ஸி எடுத்துள்ளேன். விடாமுயற்சியும், சிறிது நாவன்மையும் துணை கொண்டு மாதம் ரூ. 100 முதல் 150 வரை ஈட்டுகிறேன். நல்ல பொழுது போக்கும் கூட.

**திருமதி சாரதாம்பாள், மதுரை**

**பொறுப்புணர்ந்து பத்திக் செய்பவர்**

அடுத்த வீட்டுப் பெண் சம்சாரி. கல்யாணத்துக்கு நான்கு நாத்தனார்கள் இருக்கிறார்கள். ஓய்வு நேரத்தில் 'பத்திக்' பிரிண்ட் வேலை செய்து விற்று, கணவனின் பொறுப்பில் பங்கேற்கிறாள்.

**ரா. சுஜாதா, சென்னை-4**

**தள்ளாத வயதிலும் அயராத கைகள்**

எண்பது வயது கடந்த மூதாட்டி எங்கள் வீட்டுக்குச் சொந்தக்கார அம்மாள். இன்னும் சளைக்காமல் ஒவ்வொரு நாளும் கையல்





இலைகள் தைத்துக் கடையில் கொண்டு போய் விற்கிறார். கிடைக்கும் பணத்தில் பெண்சனுக்குப் பாத்திரம் வாங்கி அனுப்புகிறார்.

**வே. பி. சுப்பிரமணியன், பெங்களூர்**

**பூசணிக்காய்க்குப் புதிய உபயோகம்**

ஆமாம்! பூசணிக்காயைச் சிறு சிறு துண்டங்களாக நறுக்கி வேகவைத்து கலரும் சர்க்கரையும் சேர்த்துப் பதப்படுத்தி, ரொட்டி, பன் தயாரிப்பாளர்களிடம் விற்று வருகிறார். இந்தப் பெண்ணுக்கு நாளொன்றுக்கு ஆறு ரூபாய்வரை கிடைக்கிறது.

**எம். நடராஜன், சென்னை-99**

# வருவா

**கையில் கலையிருந்தால் கவலையில்லை**

போட்டோக்களுக்கு வர்ணம் அளித்தல், பின்னணி வரைதல் போன்ற வேலைகளை என் அம்மா திறம்படச் செய்வார். பல ஸ்டுடியோக்களிலிருந்து வீடு தேடி வந்து அம்மாவுக்கு வேலை தருகின்றனர். இதனால் மாதம் 750 முதல் 1000 ரூபாய் வரை எளிதாகக் கிடைக்கிறது.

**கே, சுகுணா, திருச்சி**

**பழையதைப் புதியதாக்கும் பணி**

வெளுத்துப்போனபழைய புடவைகளுக்குச் சாயம் தோய்க்க ஒரு ரூபாய்க் கட்டணம்.

கடையில் சாதாரணமாக விற்கும் வர்ணச் சாய வில்லைகளை வாங்கி இதை வெற்றிகரமாகச் செய்து வருகிறார் எங்கள் தெருவில் வசிக்கும் ஒரு பெண்.

**க. சேகர், காரைக்கால்**

**சார்பற்றவர்**

கணவரை இழந்துவிட்ட எங்கள் தூரத்து



உறவுப் பெண்மணி யாரையும் சார்ந்திருக்க விரும்பாமல், சென்னை மாம்பலத்தில் சிறிய அளவில் 'மெஸ்' ஒன்று நடத்தி வருகிறார். நம்பகமான நாற்பது இளைஞர்களுக்கு வேளை தவறாமல் உணவளித்த சந்தோஷமும் அவருக்குக் கிடைக்கிறது.
பி. ப. கமலாசுந்தர், எர்ணாகுளம்

**குழந்தைகள் காப்பகம்**

அவள் ஆசிரியை வேலை பார்த்து வந்தாள். சந்தர்ப்பச்சூழ்நிலை காரணமாகத்திடீரென்று வேலையை விட நேர்ந்தது. குறைந்த வருவாயை சுடுகட்ட வீட்டிலேயே குழந்தைகள் காப்பகம் நிறுவி நடத்தி வருகிறாள். குழந்தைகள் பராமரிப்பில் மாமியாரும் நிர்வாகத்

# பெருக

தில் மாமனாரும் இப்பெண்ணுக்கு உதவு கின்றனர்.
வி. ஜி. கனகம், சென்னை-90

**ஊனம் ஒரு குறையில்லை**

படிப்பு வாசனை இல்லாதவள் ராஜாமணி. கால் நொண்டி வேறு. இருந்த இடத்தி லிருந்தே ஓலைக் கூடைகள் பின்னி விற்று, அந்தப் பணத்துக்கு ஆடுகள் வாங்கினாள். ஆடுகளின் எண்ணிக்கை பெருகியது. சமீபத்தில் அவற்றை விற்றுத் தன் தங்கையின் திருமணத்தை நடத்தினாள்.
எம். எஸ். கோமதி, அ. தெக்கூர்

**கற்றதனால் ஆய பயன்**

கிட்டத் தட்ட இருபது வருடங்களுக்கு முன்னால் மூன்று குழந்தைகளுடன் டில்லிக்கு வந்தபோது என் கணவரும் நானும் செலவுகளைச் சமாளிக்க முடியாமல் திணறிப் போனோம். அப்போது ஆரம்பித்தேன் டியூஷன் எடுக்க. சீக்கிரமே நல்ல பெயர், அலுவலகம் செல்பவரைக் காட்டிலும்

## வாசகர் பங்கு

அதிக வருமானம். இப்போது என்னிடம் முன்னால் பயின்ற குழந்தைகளின் குழந்தைகளுக்கு டியூஷன் எடுக்கிறேன்!
வி. பட்டம்மாள், புதுடெல்லி-67

**அழகான வழி இது**

250 குடும்பங்கள் வசிக்கின்றன எங்கள் பல மாடிக் கட்டிடத்தில். அதில் ஒரு ஃப்ளாட்டில் உள்ள பெண்மணி தன் வீட்டிலேயே அழகு நிலையம் வைத்துள்ளார். 250 குடும்பங்களில் உள்ள பலர் சிகை அலங்காரத்துக்கும் ஒப்பனைக்கும் அவரிடம் போகிறார்கள். வருவாய் பெருகக் கேட்பானேன்.
கே. சசிரேகா, பம்பாய்-5



**சகலகலாவல்லி**

நீங்கள் வேலைக்குப் போகும் பெண்ணா? உங்கள் சமையலில் பொடித் தேவைகளைக் கவனித்துக்கொள்ள ஆளிருக்கிறார். சாம்பார் பொடி, ரசப் பொடி, மிளகாய்ப் பொடி, புளிக் காய்ச்சல் போன்றவற்றைத் தயாரித்து விற்கும் என் தோழியைத்தான் குறிப்பிடுகிறேன். மேலும் தையல் வேலைகளையும், சோப்புத் தூள், பாத்திரம் தேய்க்கும் பொடி போன்றவற்றைத் தயாரித்து விற்பனையும் செய்து வருகிறாள்.
மைதிலி ஸ்ரீனிவாசன், பெங்களூர்-11

**சமயம் அறிந்து**

சீஸனுக்கு ஏற்றபடி வியபாரம் செய்து பொருள் ஈட்டுகிறாள் எனக்குத் தெரிந்த ஒரு பெண். பொங்கல் சமயத்தில் வாழ்த்து அட்டை, கரும்பு; தீபாவளியா துணி, பட்டாசு வகைகள்; நவராத்திரி என்றால்



சொந்தப் பொம்மைகள் எல்லாம் வீட்டிலிருந்தபடியேதான்.
**திருமதி சுசீலா, மதுரை-6**

### பாட்டு கிளாஸ் நடத்துகிறேன்

காலை 11 முதல் மதியம் 1 மணி வரை எனக்கு ஓய்வு நேரம். அப்போது இசை வகுப்புகள் நடத்துகிறேன். சின்ன வயதில் கற்றதை மறவாமல் இருப்பதோடு இறைவன் புகழ் பாடிய திருப்தியும், கூடவே கணிசமான வருமானமும் கிடைக்கிறது.
**கமலா சீதாராமன், ஹைதராபாத்**

### வங்கி கடனுக்கு நன்றி

சுருக்கெழுத்து தட்டெழுத்துக் கற்றிருந்தும் கணவர் விரும்பாததால் வேலைக்குப் போகவில்லை. சுயவேலை வாய்ப்பு திட்டத்தின் கீழ் வங்கிக் கடன் பெற்று இன்ஸ்டிடியூட் ஆரம்பித்து விட்டேன்.
**எஸ். பூங்கொடி நாகராஜன், தர்மபுரி**

### வீடு தேடி வந்த வேலை

மொழிப் பிரச்னையும், என் பயந்த சுபாவமும் வேலைக்குப் போகத் தடையாக இருந்தது. கணவரின் நண்பர் உதவினார். அவர் உதவியால் வெளி நாட்டுத் தூதரகங்களின் ஆங்கிலக் குறிப்புக்களைத் தமிழில் மொழிபெயர்க்கும் வேலை கிடைத்தது. வருமானம் பெருகியதோடு என் தன்னம்பிக்கையும் வளர்ந்தது.
**ஜி. சபிதா, புதுடெல்லி-64**

### மணம் மிகுந்த தொழில்

அருகே உள்ள பூ மார்க்கெட்டிலிருந்து அவர்கள் கட்டியது போக மீதும் பூக்களைக் கொண்டு தருவார்கள். நாங்கள் கட்டித் தரும் ஒரு படி பூவுக்கு 40 முதல் 80 காசுவரை தருவார்கள். ஒரு நாளைக்கு 5 ரூபாய்க்கு மேல் சம்பாதிக்கலாம்.
**ஜி. ஜோதிமணி, கோவை**

### கைக்கு வேலை காதுக்குக் கம்மல்

கல்லூரியில் என்னுடன் படித்த பெண் படித்துக் கொண்டிருந்தபோதே துண்டுகளின் ஓரத்தில் முடிச்சுப் போடும் தொழிலைச் செய்து சம்பாதித்து வந்தாள். அப்படிச் சம்பாதித்த பணத்தில் காதுக்குக் கம்மல் கூட வாங்கிவிட்டாள். இத்தனையும் அவள் படிப்பைப் பாதிக்கவேயில்லை.
**சுதா பாண்டியன், மதுரை**

### சின்னத் தொழில், நல்ல லாபம்

மருந்துக் கடைகளில் உபயோகிக்கப்படும் சிறிய பேப்பர் கவர்கள் செய்தல், மிட்டாய் தயாரிப்பாளர்களிட மிருந்து மிட்டாய் வாங்கி வந்து நான் சுற்றித் தருதல் — இவை எங்கள் வருமானத்தைப் பெருக்கி வருகின்றன. கல்கியின் 'வாழ்க்கை வளம்பெற' இலவச இணைப்பைப் படித்தது முதல் ஊதுவத்தி தயாரிப்பில் ஈடுபட்டுள்ளோம்.
**எஸ் மங்கை, மதுரை**

### உறுதுணை

ஓவியமும் ஸ்க்ரீன் பிரிண்டிங்கும் கற்றுக் கொண்ட என் நாத்தனார் பெண் விளம்பர கம்பெனிகளுக்கு டிசைன்கள், பானர்கள், லேபிள்கள் போன்றவற்றை வீட்டிலிருந்தபடியே உருவாக்கித் தந்து சம்பாதித்துக் குடும்பத்துக்கு உறுதுணையாக இருக்கிறாள்.
**என். எம். லட்சுமி மோகன், நாகர்கோவில்**

### லாபகரமான ஏற்பாடு

அன்று ஹோட்டல்கள் பந்த். என் சிநேகிதி வீட்டுக்குப் பக்கத்திலிருந்த மருத்துவமனை சிப்பந்திகள் காப்பி கிடைக்காமல் திண்டாடிவிட்டனர். அன்று ஒரு நாள் மட்டும் பத்துப் பேருக்குக் காப்பி தயார் செய்து தருமாறு அவளைக் கேட்டனர். அன்று வீட்டுக் காப்பியை ருசித்த பிறகு அவர்களுக்கு ஹோட்டல் காப்பி ரசிக்கவில்லை. இந்த ஏற்பாடு தொடர்கிறது. ஹோட்டல் விலைக்கே காபியை விற்கும் என் தோழி மாதம் 200 ரூபாய் நிகர லாபம் பெறுகிறாள்.
**திருமதி ராஜி ஜெயராம், மதுரை**

வருவாய் பெருக நேயர்கள் வழங்கும் மேலும் பல பயனுள்ள யோசனைகள் டிசம்பர் 23 கல்கி இதழில் பிரசுரமாகும்.

---



பியூன்: லேடி டைப்பிஸ்ட் வந்த பிறகு நம்ம ஆபீஸ்லே ஒரு மாற்றம் சார், ஸ்டாஃப்ல ஒருத்தர் கூட தூங்கறதில்லை.

மானேஜர்: நல்ல மாற்றம்தான். ஆனால் இரண்டொருத்தர் வீட்டுக்குப்போன பிறகு கூட தூங்கறதில்லேன்னு கேள்விப்பட்டேனே, உண்மையா?

—அ. தெய்வசிகாமணி.

# பவானி புக் சென்டர்

19, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை-600 033

## எமது புதிய வெளியீடுகள்

| | |
|---|---|
| மார்க்கண்டேய புராணம் | ரூ. 8-00 |
| கார்த்திகை மஹாத்மியம் | ரூ. 4-00 |
| கல்கி புராணம் | ரூ. 9-00 |

1. நாற்பது ஸம்ஸ்காரங்கள் — ரூ. 9-00
2. ஸூதக ஆசௌச விளக்கம் — ரூ. 1-25
3. வைகுண்ட ஏகாதசி (25 ஏகாதசி மஹிமை) — ரூ. 2-00
4. துளசீ பூஜையும் கதையும் — ரூ. 2-00
5. ஸதாசாரம் — ரூ. 5-00
6. துர்க்காஸப்தஸ்லோகியும் — ஸ்ரீ லக்ஷ்மி அஷ்டோத்ரம் — ரூ. 2-00
7. ஸர்வஜனஸர்வதேவதா — பூஜை முறை பாராயண ஸ்லோகங்கள் — ரூ. 2-50
8. ஆதித்ய ஹ்ருதயமும் கநகதாரா ஸ்தவமும் — ரூ. .1-00

# ஹா...ச்சு ஹா...ச்சு நாளே பாழாப் போ...ச்சு





ஜலதோஷம் வாட்டுகிறதா?
கோல்டரின் அதை விரட்டுகிறது.

CASBC-111-103 TAM

# நிலவே நீயும் விலகாதே

நிலவே நீயும் விலகாதே

நிலவே நீயும் விலகாதே

## 6

பாலா மறுபடி மணியைப் பார்த்தான்.

ஐந்தடிக்க இன்னும் பத்து நிமிடங்கள். காலையிலிருந்து தேக்கித் தேக்கி வைத்திருந்த நம்பிக்கை அந்த விநாடியில் எரிகிற கர்ப்பூரமாயிற்று. இனிமேல் ஃபோன் வராது என்று திடமாய்த் தெரிந்துபோக, அதில் அடிபட்டுத் தொய்ந்து போனான்.

சரியாய் இன்றைக்குப் பன்னிரண்டாவது நாள், அனுசூயாவைப் பார்த்து. உட்லண்ட்ஸிலிருந்து கிளம்பும்போது ஆயிரம் சத்தியங்கள் செய்திருந்தாள்.

அன்றைக்குப் போனவன்தான். மறுநாள் முழுக்க முன்மேல் அமர்ந்திருந்தான். ஆயிரம் ரூபாய் டிராஃப்டிற்குப் பத்தாயிரம் ரூபாய் என்று எழுதினான். அன்றைக்கு ஃபோன் அடித்தபோதெல்லாம் பாய்ந்து பாய்ந்து சென்று எடுத்து ஏமாற்றத்தோடு கூப்பிடப்பட்ட மற்றவர்களை அழைத்து ஃபோனைக் கொடுத்தான்.

கடைசிவரை அனுசூயா அழைக்கவேயில்லை.



ஙியரென்று ஃபோன் அடிக்க ஆரம்பித்தது. உடன் உள்ளூறச் சபலம் தட்டியது. ஒருவேளை அனுசூயாவாய் இருக்குமோ?

காலையிலிருந்து அப்படி எழுந்து எழுந்து போய் ஏமாந்து வந்தது அன்றைய நாளுக்குப் போதும் என்று தோன்றியது.

ஙியரென ஏற்பட்ட ஒரு உந்துதலில் சட்டென்று எழுந்தான். நிறுத்தி வைக்கப்பட்டிருந்த வெட்ஜரைத் தாண்டினான். ஒரு தவறான மதிப்பீட்டில் கால் நேராய் வெட்ஜரில் விரித்த பக்கங்களில் வழுக்கியது. தடுக்க முயன்றும் முடியாமல் நிலைதடுமாறிக் கீழே விழுந்தான்.

முட்டியில் நல்ல அடி. இடுப்பில் எங்கேயோ பிடிப்பு. ஊன்றின முழங்கையில் சிராய்ப்பு.

''அடேடே.... என்ன பாலா?'' என்று பதறிப்போய்ச் சில குரல்கள் அருகில் நெருங்கின.

அதற்குள் யாரோ அறையிலிருந்து ஃபோனை எடுத்து மகா எரிச்சலாய் 'ஹலோ' என்றார்கள்.

''பாலா உனக்குத்தான்.''

பாலா மோதிய பந்து மாதிரி எழுந்தான். 'இது அனுதான்', 'இது அனுதான்' என்று உள்ளம் கெக்கலி கொட்ட, பாண்டி ஆடுகிற பையன் மாதிரி கோசாய் நொண்டிக்கொண்டே ஃபோனைப் பார்த்து ஓடினான்.

''பாலா'' என்றான் ஃபோனைக் கையில் எடுத்தவுடன்.

''நான்தான் பாலா...'' என்றாள் அனுசூயா.

கையை விட்டு நழுவிய சொர்க்கம் மறுபடி மீண்டமாதிரி இருந்தது அவனுக்கு.

''என்ன ஆச்சுடா?'' என்றான் குரலில் அத்தனை ஏக்கத்தையும் கொட்டி.

''எல்லாம் ஆயிடுச்சு பாலா. எனக்குக் கல்யாணம் ஸெட்டில் ஆய்டுச்சி பாலா!''

குபீரென்று மார்பில் யாரோ ஓங்கிக் குத்தினமாதிரி உணர்ந்தான் பாலா.

மறுபுறம் விம்மல் கேட்டது. லேசாய் ஆரம்பித்துப் பெரிதாகிப்போன விம்மல்கள்.

''நான் ஒன்னை உடனே பாக்கணும் அனு... நான் ஒன்னை உடனே பார்க்கணும் அனு'' என்று ஃபோனில் துடித்தான் பாலா.

''முடியாது பாலா... அம்மா எதிர்க் கடைல வெள்ளிச் சாமான்லாம் பார்த்திட்டிருக்காங்க...ஃபோனுக்கு வெளியே கதம்பா நிக்குது....''

''என்னிக்கு ஆச்சிம்மா? யாரு பையன்?'' என்றான் பாலா, உள்ளங்கையால் முகத்தைத் துடைத்துக் கொண்டே.

''அன்னிக்கு வீட்டில நுழையறப்பவே அவங்க காத்திட்டிருந்தாங்க பாலா. பார்த்தவுடனே பொண்ணு புடிச்சுப் போயிடிச்சின்னிட்டாங்க. அம்பத்தியஞ்சு பவுனுக்கு அப்பா ஒத்துக்கிட்டார். நான் நம்ப விஷயத்தைச் சொன்னேன் பாலா. ஒரே தகராறு ஆயிடுச்சி. என்னை வெளியே எங்கேயும் போகக்கூடாதுன்னு....'' அதற்கு மேல் அனுசூயாவால் பேச முடியாமல் மறுபடி விம்மல் வந்து தடுத்தது.

''நாம் பழகினது, பேசினது எல்லாம் அவ்வளவுதானடா? இதுக்கு என்னை வந்து பாக்காம இருந்திருக்கலாம், பேசாம இருந்திருக்கலாம். நான் எவ்வளவு தூரத்துக்குக் கோட்டை கட்டினேன் தெரியுமா? உங்கூட தனிவீட்லஇருக்கிற மாதிரி.. நீ எனக்குக் காப்பிபோட்டு எழுப்பற மாதிரி... சிரிச்சுக்கிட்டே ஆபீசுக்கு வழியனுப்பற மாதிரி...சாயங்காலம் அழகா ட்ரெஸ் பண்ணிக்கிட்டு வாசல்ல வந்து நின்னு எனக்காக வெயிட் பண்ற மாதிரி....''

''சொல்லாதீங்க பாலா... சொல்லாதீங்க பாலா....''

குரல் ஏறக் குறையத் தரையோடு இழுக்கப்பட்ட மாதிரி தேய்த்துக் கொண்டு வந்தது.

''நான்வந்து பேசட்டுமா அனு?''

''பிரயோஜனமில்ல பாலா...மறுபடியும் மறுபடியும் இந்த ஜாதி ரெண்டு நடுவுல வந்து பூந்துக்கும். தங்கச்சிங்க லைஃப நான் நாசம் பண்ணிட்டேன்னு வாங்க. அப்படி ஏதாவது நீ வேற வழி தேடிக்கிறதா இருந்தா மொதல்ல நான் செத்துப் போயிடறேன்... என் பொணத்தை மிதிச்சிக்கிட்டு நீ வாசப்படி தாண்டுன்னு சொல்லிச் சொல்லியே என்னை ஒத்துக்க வச்சிருக்காங்க பாலா..எல்லாத்தையும் நான் மீறிட்டு வந்தா ஒங்களோட நான் சந்தோஷமா வாழ முடியாது பாலா. அப்படி ஏதாவது நடக்கக்கூடாதது நடந்துடுச்சின்னு அது என்னாலதான், என்னாலதான்'னு நான் உயிரோட இருக்கிறவரைக்கும் குத்திக்கிட்டே இருக்கும் பாலா.''

''அப்ப அவ்வளவுதானடா அனு.''

''நான் மறுபடியும் ஃபோன் பண்றேன் பாலா....''

''எப்படா?''

''எனக்குத் தெரியல பாலா... அப்பறம் பண்றேன்.''

'க்ளிக்' என்று அந்தப் பக்கம் தொடர்பு அறுந்து போயிற்று. பாலா அப்படியே நாற்காலியில் சரிந்தான்.

சொர்க்கம்கண்ணெதிரிலேயே அவன் கையிலிருந்துநழுவிப்போகிற மாதிரிஉணர்ந்தான்.

அன்றைக்கு வீட்டுக்குள் நுழையும் போது என்றைக்கும் இல்லாத வித்தியாசத்தை உணர்ந்தான் பாலா. அப்பாவின் முகத்தில் துல்லியமான சந்தோஷம். சின்னக் குட்டி ராதாவின் முகத்திலும். சமையலறையில் வெந்து கொண்டிருந்த பிரேமாவின் முகத்திலும் அந்த ரேகை நெளிந்து கொண்டிருந்தது.

''வா பாலா... வா பாலா'.' என்றார் அப்பா. அம்மா போனதற்குப் பின்னால் அன்றைக்குத்தான் அவர் முகத்தில் அந்த அளவுக்குச் சந்தோஷம் விகசித்திருந்தது.

''அந்தத் திருச்சி வரன் செட்டில் ஆயிடுச்சி பாலா. காலையிலிருந்து அவங்க வீட்டுக்காரங்க அத்தனை பேரும் இங்கேதான் இருந்தாங்க. இருபது பவுனுக்கு மாப்பிள்ளை வீட்ல எறங்கி வந்துட்டாங்க. நம்ப பொண்ணு சும்மாவா? மூஞ்சியிலே இனி

- சுபா



கொஞ்சலே? அதான் மாப்பிள்ளைப் பையன் மயங்கி விழுந்திட்டான் ஓரேயடியா...''

பாலாவுக்குக் கூடச் சந்தோஷம் தொற்றிக் கொண்டது. உள்ளே போய் வெட்கப்பட்டு நின்றிருந்த பிரேமாவின் கன்னத்தில் ஒரு தட்டுத் தட்டினுன்.

'மாப்பிள்ளை வரார் மாப்பிள்ளை வரார் மாட்டு வண்டியிலே! பொண்ணு வரா பொண்ணு வரா பொக்கை வண்டியிலே' என்று பாடிக் காட்டினுன்.

வெளியில் வந்து முகத்தைக் கழுவிக்கொண்டான். முகத்தைக் கழுவுகையில் சட்டென்று அனுசூயாவின் நினைவு வந்தது. தன்னிச்சையாய்க் கண்ணில் நீர் சுரக்கச் செய்தது.

சொல்லாமல் கொள்ளாமல் மனத்தில் ஒரு மௌனத் திரைப்படம் ஓட ஆரம்பித்தது. அவளைப் போய்ப் பார்த்தால்தான் எல்லாம் சரியாகும்போல ஒரு உணர்வு திடீரென்று கந்தக நெருப்பாய் மனத்தில் தோன்றியது. எப்படி? எப்படி அவளைப் போய்ப் பார்ப்பது? சட்டென்று அந்த எண்ணம் பளிச்சிட்டது. பிரேமாவின் கல்யாணத்தைச் சாக்கிட்டு அழைப்பிதழ்களோடு அவள் வீட்டுப் படி ஏறினுல் என்ன?

மூன்றாம் நாள் கையில் அழைப்பிதழ் தயாராய் இருந்தது. உள்ளத்தில் மறுபடியும் நம்பிக்கை தயாராய் இருந்தது.

படியேறினுன். வாசலில் இருந்த அழைப்புக் குமிழியில் விரலைப் பதித்தான். உள்ளே 'டிடிங்' என்று சத்தம் கேட்டது.

திரையை விலக்கி 'யாரு' என்று கேட்டது கஸ்தூரியாய் இருக்க வேண்டும். ஒரே துள்ளலும் துடிப்புமாய் ஓடிவந்ததால்!

''நான் பாலா'' என்ருன்.

சட்டென்று அதன் துள்ளல் அடங்கி முகத்தில் வேதனையா, சோகமா எனப் புரியாமல் ஒரு உணர்வு இடம்பெறக் கதவைத் திறந்தது. ''ஒரு நிமிஷம்'' என்று இழுத்துவிட்டு உள்ளே மறைந்தது. அடுத்த நிமிஷம் வீரராகவன் வெளிப்பட்டார்.

''என்ன நீதான் பாலாவா... என்ன.. என்ன? என்ன? வேணும்...'' என்ருர் கதவை நெருங்கு முன். கண்ணில் கோபம். காதின் துடிப்பில் கோபம். மூக்கின் நுனியில் கோபம். கைவிரல் நுனி உதறலில் கோபம்.

''என் தங்கச்சி கல்யாணத்துக்குக் கூப்பிட வந்திருக்கேன்.''

சட்டென்று கொஞ்சம் அடங்கிப்போனுர்.

''சரி, உள்ளே வந்து குடுத்துட்டுப் போங்க'' என்ருர் திடீரெனப் பன்மைக்குத் தாவி.

பாலா உள்ளே நுழைந்து அந்த ஹாலில் காத்திருந்தான். அனுசூயா சொன்ன அத்தனை வர்ணனையும் இருக்கிறதா என்று பார்த்தான். திரையை விலக்கிக் கொண்டு அனுசூயா எட்டிப் பார்த்தாள்.

அரை மணி நேரம் கழித்துக் கரும்புச் சாறு மிஷின் தள்ளிய கரும்புச் சக்கையைப் போல வெளிவந்தான் பாலா.

பிடரியில் யாரோ கைவைத்து நெட்டித் தள்ளும் உணர்வு வேறு மனம் பூராவும் நிறைந்திருந்தது.

எட்டு நாட்கள் கடந்த திசை தெரியவில்லை.

ஒரு நாள் புடவைக் கடையில் பவுடர் வாசம், சென்ட் வாசம் வியர்வை வாசம் பெண்கள் வாசம் என்று கதம்பமான வாசனைக்கு நடுவில். ஒரு நாள் நகைக் கடைக்காரர் கடையில் திராவக வாசம், கரியடுப்பில் உமி எரியும் வாசம் என்று இன்னொரு கதம்பத்துக்கு இடையில் கழுத்து நெக்லேஸுக்கும், காது மாட்டலுக்கும், கை வளையலுக்கும் டிஸைன் கொடுப்பதில். அத்தனை அவசரத்தில் அவர் நெக்லேஸைக் கடையிலேயே வாங்கிக்கொள்ளச் சொன்னதில் அதற்கு ஒரு நாள். அவசர சத்திரத்திற்கு இன்னொரு நாள். வாங்க வேண்டிய மளிகைச் சாமான்களுக்கு. இடையிடையே அவசரமான, அவசியமான அழைப்புகளுக்கு — எட்டு நாள் போதவில்லை.

ஒரு வழியாய்க் கொஞ்சம் ஓய்ந்து உட்கார்ந்திருந்தான் பாலா.

அரிசி மாவைக் கும்மித் தேய்த்துத் தண்ணீரில் விழுதாய்க் கரைத்திருந்தார்கள். மெலிதான துணியை அதில் நனைத்து விரல் வழியே மெல்லப் பிழிந்து விதம் விதமாய் அலங்காரக் கோலங்கள் இட்டுக் கொண்டிருந்தார்கள் பெண்கள்.

ஆகாயத்தில் நிலவு உலவிக் கொண்டிருந்தது. அது ஓடி ஒளிந்து சூரியன் தன் ராஜ நடையைத் தொடங்கி விட்டால் பிரேமா கழுத்தில் தாலி ஏறிவிடும். இரவோடிரவாய்க் கோலம் போட்டு விடிவதற்குள் அது காய்ந்து போக வேண்டும் என்ற பரபரப்பில் பெண்கள் காலை அகல வைத்து, குறுக்கி வைத்துக் கோலம் தீட்டினுர்கள்.



பின்லாந்தில் கைதிகள் ஒவ்வொரு வாரமும் விடுமுறை நாட்களில் மட்டும் சிறையில் இருந்தால் போதும். மற்ற நாட்களில் குடும்பத்திற்காக சம்பாதிக்கலாம். ஆனால் போலீஸ் பாதுகாப்பு இருக்கும்.

—ஜா. ரவி.



## கம்ப்யூட்டர் சாதனை!

ஆறாயிரம் பேர்கள் நூறு ஆண்டுகளில் செய்யும் தவறுகள் அத்தனையையும் ஒரு கம்ப்யூட்டர் இரண்டே வினாடிகளில் செய்து விடுமாம்.

லலிதா செல்லப்பா.

பார்த்துக் கொண்டிருந்த பாலாவுக்கு நினைவு அலைந்தது. அனுசூயா நிறையச் சத்தியங்களைக் காற்றில் கரைத்த மாதிரி அன்றைக்காகப் பண்ணியிருந்த சத்தியத்தினையும் காற்றில் கரைத்திருந்தாள்.

'பிரேமா கல்யாணத்துக்கு நீ என்ன உதவி பண்ணப் போறே அனு?'

'என்ன செய்யணும் சொல்லுங்க பாலா.'

'பிரேமாவுக்கு ஜடை பின்னி விடணும்... தலையில பிச்சோடை வெச்சு விடணும்... அதுக்குக் கொஞ்சம் கூட அலங்காரம் பண்ணிக்கத் தெரியாது. நீதான் அதுக்குண்டானதைச் செய்யணும்... அப்புறம் மொத நாள் வந்து நிச்சயதார்த்தச் சாப்பாட்டை சாப்பிட்டுக் கோலம் எல்லாம் போடணும்... உங்க வூட்ல ஒன்னைக் கொண்டு வந்து வுடச் சொல்றேன். அதுக்கு ஒரு கார் ஏற்பாடு பண்ணிடறேன்... இல்லே சத்திரத்திலேயே பிரேமா கூடத் தங்கிட்டுக் கல்யாணத்தை முடிச்சுட்டு அப்புறமாப் பொறப்படலாம்.'

'மொத நாளே வந்துடறேன் பாலா.'

அனுசூயா வராதது மட்டுமில்லை. கதம் பாவைக் கூடக் காணவில்லை. வகுப்பில் கூடப்படித்தவள் என்றமுறையில் அவளாவது வந்திருக்கலாம். ஒருவேளை பாலாவை நிராகரிப்பதற்கு ஒரு அழுத்தம் கொடுக்க வேண்டும் என்பதால் அவளுக்கும் கூட அனுமதி மறுக்கப்பட்டு விட்டதோ?

என்னென்ன சொல்லிவிட்டார்கள் அனுசூயாவின் வீட்டில்! மற்றவர்களைப் புறங்கையால் தள்ளிவிடலாம். அனுசூயா கூட என்ன வார்த்தை பேசிவிட்டாள்!

'நீங்க பேசாம வேற யாரையாவது கல்யாணம் பண்ணிக்கிட்டுச் சந்தோஷமா இருங்க பாலா... இந்த ஜன்மத்தில் நம்ம கல்யாணம் கெடையாது.'

'அவசரப்படாதே அனு.'

'இல்ல பாலா. நிச்சயமா நீங்க வேற யாரையாவது பண்ணிட்டுத்தான் ஆகணும். பிரேமாவும் கல்யாணம் ஆகிப் போயிட்டா வீட்ல பொம்பளை இல்லாமக் கஷ்டப்பட வேணும் பாலா... நீங்க பண்ணிக்குங்க.'

அனுசூயா சொன்னதைத்தான் அப்பா சொன்னார். பிரேமா சொன்னாள். மூன்று மாமாக்களும் அவர்களுடைய அருமை மனைவிமார்களும் திருப்பித் திருப்பிச் சொன்னார்கள்.

'தங்கச்சி கல்யாணம் ஆகட்டும். அப்புறம் தான் எனக்குன்னு தள்ளித் தள்ளிப் போட்டியே பாலா... இப்ப தங்கச்சி கல்யாணம் ஆயிடிச்சி. வீட்ல பொங்கிப் போட, மத்த விஷயங்களைக் கவனிக்க ஒரு பொண்ணு வேணும். அம்மா இல்லாத குறையோட இப்ப பிரேமாவும் மாமியார் வீட்டுக்குப் போயிடறதாலே இந்தச் சின்னது எவ்வளவு கஷ்டப்படும் சொல்லு. மத்தவங்களுக்காக இல்லாட்டியும் நீ ஒன் வீட்டு நெலைமைக்காவது கல்யாணம் பண்ணிட்டே ஆகணும். சரின்னு சொல்லு. ஏற்கனவே நாலு எடத்தில போட்டு தொணப்பிட்டு இருக்காங்க. இப்பவே முடிச்சுடுவோம்.'

'சரி' என்று சொல்லிவிட மனம் எப்படி வர முடியும் என்று எதிர்பார்க்கிறார்கள்? அவர்களுக்கெல்லாம் வாலிப வயதில் இந்த வேதனை தெரியாமல் போயிருக்கலாம். அதனால்தான் அப்படிச் சொல்வதைச் சொல்லட்டும்...

''பாலா ...'' என்று ஸ்டோர் ரூமிலிருந்து குரல் வந்தது. சட்டென்று மற்ற விஷயங்கள் விலகிக்கொள்ள அங்கே விரைந்தான் பாலா.

''என்னப்பா?''

''அரிசி இன்னொரு அரை மூட்டை வேணுங்களுங்க பாலா... நாம்ப எதிர்பார்த்ததை விட இன்னிக்கு ஆளுங்க அதிகமா வந்துட்டாங்க. இருக்கிற அரிசி மத்தியானத்துக்கே சரியாப் போயிடும். ராத்திரி ரிசப்ஷனுக்குக் சொறையும்திருங்க.''

''ஏற்பாடு பண்ணிடறேம்பா'' என்றான் எரிச்சலோடு.

''ஒனக்கு என்ன ஆச்சி? எப்பப் பார்த்தாலும் உம்முன்னு மூஞ்சியைத் தூக்கி வச்சிக்கிட்டிருக்கியே.... கல்யாண வீட்ல சிரிச்ச மூஞ்சியோட இருக்க வேணும்? என்ன கஷ்டம்? எங்கிட்டச் சொல்லேன்.''

''ஒண்ணுமில்லேப்பா...'' என்று தயங்கினான். ''எல்லாம் நல்லபடியா நடந்து முடியணுமேங்கற கவலைதான்.''

''ஹஹாங்... ஒங் கவலை வேற... எனக்குத் தெரியும்.''

பாலா திடுக்கிடலோடு அவரைப் பார்த்தான்..

''பிரேமாவும் போயிட்டா வீட்டைப் பாத்துக்க ஆளில்லையேன்னு யோசிக்கிற... சமையல் வேலையெல்லாம் ஒன் தலைல வந்து விழுந்துடுமேன்னு கவலைப்படற இல்லே?''

சுலபமான பதிலாய் அதுதான் அமையுமென்று தோன்றிற்று.

''இருக்கலாம்ப்பா'' என்றான் பாலா. அவருக்காக ஒரு புன்னகையை உதட்டில் பரவ விட்டுக்கொண்டு.

''நான் சொல்றதை நீ ஏன் கேட்கக் கூடாது பாலா?''

''கல்யாணம்தானேப்பா? இன்னும் ஒரு நாள் டயம் கொடுங்கப்பா... மொதல்ல இது நடந்து முடிஞ்சுடட்டும். அப்புறம் சொல்றேன்'' என்று அவசரமாய் அந்த இடத்தை விட்டு விலகினான். (தொடரும்)

மௌரைன் புரைவலில் கழுத்து பள பளக்கும் அந்தக் கறுப்புப் புருக்காளைப் பார்த்துக் கொண்டே இருக்கதில் நேரம் போனதே தெரியவில்லை.

சப்தம் கேட்டுச் சட்டென்று திரும்பிய போது, கான்வென்ட் பூக்கள் கலகலத்துக் கொண்டு செல்வதைப் பார்த்ததும், நேர மாகி விட்டதென்று உறைத்தது. உடனே எழுந்து கொண்டான்.

ஹேமாவை ஸ்கூலிலிருந்து அழைத்து வர வேண்டும்.

ஸ்கூல்விட்டுப்பத்துநிமிடம் ஆகியிருக்கும். போச்சு! இத்தனை நேரம் அங்கே மன்னி கத்தத் துவங்கியிருப்பாள். எதற்கெடுத் தாலும் இந்த மன்னி ஏன் இப்படி ராட்சஸத் தனமாய்க் கத்துகிறாள்?

இதே மன்னிதான் எவ்வளவு அழகான வளாக, எத்தனை சிரித்துக் கொண்டு இருந் தாள் கல்யாணம் ஆன புதிதில்!

பெரியண்ணாவுக்குக் கல்யாணமான போது இவனுக்குப் பதிமூன்று வயது.

அவன் வாழ்க்கையிலே முதன் முதலாக பேண்ட் எடுத்தது பெரியண்ணா கல்யாணத் தில், தான். அதுவே அவனுக்கு மாபெரும் சந்தோஷத்தையனத்தில் உற்பத்தி செய்தது. புதிய பேண்ட் போட்டுக் கொண்ட சணத் தில் துந்துபிகள் முழங்க, வரிசங்கம் நின்று ஊத தன்னை ஒரு ராஜ குமாரனாக வரித்துக் கொள்ள முடித்தது மனத்தில்.

சந்தனப் பேலாவைக் கொடுப்பதற்காகப் பெண்வீட்டார் வீட்டிற்குப் போனான். கூட நடுவில் சிவந்த மருதாணியிட்ட கைக ளோடு ஒல்லியாய், உயரமாய், சிவப்பாய் அமர்ந்திருந்தாள் மன்னி.

யாரோ அவளிடம், ''இதுதான் உன் சின்ன மச்சினன்டி!'' என்றதும் தலைதூக்கி சினேகிதமாய்ப் பார்த்தாள். சிரித்தாள். இவனுக்கு முகம் சிவந்து வெட்கம் பிடுங்கித் தின்னப் பேலாவை வைத்து விட்டு ஓடி வந்து விட்டான்.

அந்தவெட்கமும், புன்னகையும், சினேகிதப் பார்வையும் எங்கே போய் ஒளிந்து கொண் டன?

அவசர அவசரமாய் சைக்கிளைக் கிளப்பு கையில், மன்னி பார்த்து விட்டாள். ''குழந்தை ஸ்கூல் விட்டுப் பேந்தப் பேந்த முழிச்சிண்டு இருக்கப் போறது. கால் மணி நேரம் குறைச்சலா ஊர் சுற்றினாத்தான் என்ன?'' என்றாள்.

விர்ரென்று மூக்கில் செனீர் சுரந்தாலும், இவன் பதில் ஒன்றும் சொல்லாமல் புறப்பட் டான்.

ஹேமா ஸ்கூல் வாசற்படிக்கட்டில் உட் கார்ந்து வெற்றிடத்தை வெறித்துக்கொண் டிருந்தது. இவனைக் கண்டதும், ''ஏன் சித் தப்பா, லேட்?'' என்றது.

''உங்கம்மாவே முடிச்சாலும், நீ விட மாட்டியே மஹாராணி!'' என்று அவள் மண்டையில் செல்லமாய் ஒரு தட்டு தட்டி, கேரியரில் அமர்த்திக் கொண்டான். கேன் வாஸ் பொதியை ஹாண்டில்பாரில் மாட்டிக் கொண்டு கிளம்பினான்.

நீட்டில் போட்ட கருவடாம் தலையில் ஓர் அடி அடித்து உடைத்து வாயில் போட்டுக் கொண்டே பெரியண்ணா கேட் டான்.

''அப்புறம் என்னதான் சொன்னான் இண்டர்வியூவிலே? வேலைதரமாட்டானாமா?''

''தற்சமயம் இருக்கும் மூன்று வேகன்ஸிக் கும் லோகல் கேண்டிடேட்ஸ் தான் எடுக்கப் போறாங்களாம்!''

''பிறகு ஏன் உன்னைக் கூப்பிட்டானாம், மெனக்கெட்டு? இண்டர்வ்யூ வந்த செல வுக்கு டி. ஏ., டி. ஏ. கேட்கிறது தானே?''

''அதுக்குள்ளே 'தாங்க்ஸ்' சொல்லி வெளில தொறத்திட்டானே?''

''அக்கவுண்ட்ஸ்லே இருக்கிற நம்ம வெங்கடேசனைப் போய்ப் பார்த்தியா? நான் அனுப்பிச்சேன்னு சொன்னியா?''

''பாவம், அந்த வெங்கடேசனும் தான் உங்களுக் காக எத்தனை பேருக்குச் செய் வார்? ஏற்கெனவே உங்க முதல் தம்பி சாரதிக்கு வேலை இடைச்சது அவர் பண்ணின புண்ணி யந்தான்!'' என் முள் மன்னி அலுத் துக் கொண்டே.

இவன் இன்னும் கொஞ்சம் சாதம் போடச் சொல்லிக் கேட்கநினைத்தவன்.



# ரு.பெ.எண் கனவுகள்

புவனா சந்திரன்

மனத்தை மாற்றிக் கொண்டு அப்படியே எழுந்திருந்தான்.

''வேலை வாங்கித் தர்ற வரைக்கும்தான் அண்ணா, மன்னி வேணும். பிறகு கொஞ்சமாவது நன்றி விசுவாசம் இருந்ததோ? இங்கே இருக்கிற தானாவிலேர்ந்து வர்றது என்ன பெரிய கம்பச் சித்திரமா? போன மாசம் இடுதிப்னு வந்து அஞ்சு நிமிஷம் தலையைக் காட்டிட்டு ஹேமாவுக்கு ஒரு பித்தல் டிரஸ் பினாட்பாரத்தில் வாங்கிக் குடுத்துட்டுப் போயாச்சு!''

''ஆரம்பிச்சுட்டியா நீ? ஸாரதி ஷிட்டு' ட்யூட்டி, ஓவர் டைம், ஓட்டல் சோறுன்னு இடந்து அல்லாடறான். அங்கேயிருந்து அடிக்கடி வர்றது முடிகிற காரியமாடி?''

ஸாரதி எப்படி ஆறு மாதம் இந்த நரகத்தில் இருந்தான் என்பதே இவனுக்கு ஆச்சர்யமாய் இருந்தது. மன்னி ஊசி ஊசியாய்ப் பேசிப் பேசியே அவனை ரணப் படுத்தியிருப்பாளே! அதுதான் வேலை கிடைத்த மறுகணம் ஓடிவிட்டான் போல!

தானும் பேசாமல் ஸாரதியின் அறைக்குப் போய்த் தங்கிக் கொண்டால் என்ன? என்ன இந்த ரயில்வே க்வார்ட்டர்ஸ் பெரிய புடலங்காய்?

அவனே ஓட்டலில் சாப்பிடுகிறான். தான் வேறு போனால் ஏகப்பட்ட செலவாகும். மேலும் பெரியண்ணாவென்றால், தன் இன்ஃப்ளுயன்ஸில் எங்காவது சொல்லி ஒரு வேலைக்கு ஏற்பாடு செய்வான். ஸாரதியின் சொற்ப சம்பளத்திற்கு, அவனைப்போய்த் தொந்தரவு செய்வது சரியல்ல!

''தலை எழுத்து வாத்யாரே! மொட்டை அடிச்சாலும் போகாது!'' என்று சொல்வானே சூர்யப் பிரகாஷ், எத்தனை சத்தியமான வார்த்தைகள்!

யார், யார் காலிலோ விழுந்து கடன் வாங்கிப் பணம் சட்டிப் படித்து முதல் வகுப்பு எடுத்தாலும், அரசாங்கச் செலவில் படித்து ஜனதாவில் பாஸ் செய்தவர்களுக்கே வேலை கிடைத்தது. அரசாங்கம் செய்வது சரியா, தவறு என்பது பற்றி அவன் கவலைப்படவில்லை. அவன் படிப்புக்கு ஒரு வேலையை அந்த அரசாங்கம் தர வேண்டுமென்பதே அவன் கவலை!

பேசாமல் மேலே படிக்காமலே இருந்திருந்தால் அப்பாவுக்குக் கடனாவது ஏறாமல் இருந்திருக்கும். இந்த வயதான காலத்தில் கிராமத்தில் சண்டவனுக்கும் கூனிக் குறுகிப்



# "உங்கள் காஸ் சிலிண்டர் மாற்றப்படும்போது நீங்கள் செய்யவேண்டிய முதல் வேலை என்ன?"



முதலில் சமையல் அறையில் உள்ள அனைத்து நெருப்புகளையும் அணைக்கவும்; அகல் விளக்கு, அகர்பத்தி, மண்ணெண்ணெய் ஸ்டவ், சூலா விளக்கு, சிகரெட்டுகள் அனைத்தும். பின்பு எல்லா மின்சார சாதனங்களின் ஸ்விட்சுகளையும் அணைக்கவும்; ரெஃப்ரிஜிரேட்டரையும்கூட, நல்லது.

டெலிவரி செய்பவரால் செய்யப்படவேண்டியவை:

1. பிரஷ்ஷர் ரெகுலேட்டர் ஸ்விட்ச்/சிலிண்டர் வால்வு மற்றும் உங்கள் ஸ்டவ் மீதுள்ள காஸ் டேப்புகள் மூடப்பட்டிருப்பதை உறுதி செய்தல்.

2 புதிய சிலிண்டர் மீதுள்ள சீலை (முத்திரையை) அவர் உங்களுக்குக் காட்டுதல்

3. கசிவிற்காக, சிலிண்டர் வால்வு ரெகுலேட்டர் ஜாயின்ட், ரப்பர் ட்யூப் மற்றும் அதன் இணைப்புகளை சோதனை செய்தல்.

4. இரண்டு பர்னர்களும் பற்ற வைக்கப்பட்டு 'ஃபுல்' முதல் 'லோ' வரை சோதனை செய்தல்.

5. வேறு ஏதாவது அவசியமாக கவனிக்கப்படவேண்டியிருந்தால் மெக்கானிக்கை அனுப்புதல்.

பாதுகாப்பை முன்னிட்டு அதைச் செய்யவும்.




ARTIC 4374 TAM

## குக்கிங் காஸை உங்கள் சிறந்த நண்பனாக்கிக் கொள்ளவும்.

பொதுமக்கள் நலனை முன்னிட்டு பாரத் பெட்ரோலியம் கார்ப்பொரேஷன் லிமிடெட்டால் வெளியிடப்பட்டுள்ளது.

பதில் சொல்லும் நிலைமை தவிர்க்கப்பட்டிருக்கும்!

படுக்கையைச் சுருட்டிக் கொண்டு வராந்தாவுக்குப் போனான். படுத்தான். தூக்கம் வரவில்லை. உள்ளே மன்னி என்னவோ அண்ணாவிடம் மொணமொணத்துக் கொண்டிருந்தாள். தொண்ணூறு சதம் அது அண்ணா தன் குடும்பத்திற்குச் செய்கிற உதவி பற்றிய எதிர்ப்புப் பிரேரணையாகத்தான் இருக்கும்!

வேலை ஒன்றும் சீக்கிரம் கிடைக்கப் போவதில்லை. மன்னி ஒன்றும் மாறப்போவதில்லை. தன்னுடைய ரோஷமும் சாகப் போவதில்லை. பிறகு எதற்குச் சிக்கல்?

நாளை ஊர் திரும்பிவிட முடிவு செய்து கொண்டு, நிம்மதியாய்த் தூங்க ஆரம்பித்தான்.

மறுநாள் காலை அண்ணா முன்னதாகவே ஆபீசிற்குப் போய் விட்டான். வழக்கப்படி இவன் போஸ்ட் ஆபீஸிற்குத் தபால் பார்க்கப் போனான்.

இவன் எழுதிய பேங்க் பரீட்சையில் தோல்வி அடைந்ததற்காகத் தபால்கார்டில் அச்சடித்து வருந்தியிருந்தார்கள்! 'நீ வேல்யு வேஷன் கிடையாதென்கிற தைரியமோ?'

திடீரென்று இவனுக்கு அப்பா – அம்மாவும், ஊரும், தாமரைக் குளமும், படித்துறையும், சித்தி விநாயகரும், அங்காளத்தம்மனும், லெவல் க்ராஸிங்கும், மாயவரம் பாஸஞ்சரும் மனத்தில் உந்த விர்ரென்று அண்ணாவின் ஆபீஸிற்குச் சென்றான்.

இவனைப் பார்த்ததும் அண்ணா எதுவும் பேசாமல் மேஜை டிராயரைத் திறந்து ஒரு கவரை எடுத்துக் கொடுத்தான். ஊரிலிருந்து தபால். அம்மா, வீட்டு விலாசத்திற்குத் தபால் போடுவதில்லை.

நுணுக்கி நுணுக்கி வெள்ளாற்று ஒழுங்கில் அம்மா எழுதியிருந்தாள். தங்கை பழையபடி புருஷனிடம் கோபித்துக் கொண்டு வந்து விட்டாளாம். அவள் புருஷன் தன் அம்மா பேச்சைக் கேட்டுக் கொண்டு கொடுமை பண்ணுகிறானாம். தனிக் குடித்தனத்திற்கு வர மறுக்கிறானாம்.

ஒரு பதினைந்து வரிக்கு மாப்பிள்ளை குடும்பத்தை விலாவாரியாக விளாசியிருந்தாள். கடைசியில் எதிர்பார்த்த அந்த வரி: வரும் மாசம் அதிகம் ணம் அனுப்பு!

இவன் லெட்டரை எடுத்துப் பையில் வைத்துக் கொண்டான். அண்ணா பதற்றமுடன், ''லெட்டரை இப்படிக் கொடு. வீட்ல கொண்டு போய்ப் போட்டுடப் போறே!'' என்றான்.

இவன் மனத்தில் நேற்று முளைத்த எண்ணம் புதைந்து போய், புதிய விஷயங்கள் கனக்கத் துவங்கின.

அண்ணாவின் மேஜை மேலிருந்த டைம்ஸ் ஆஃப் இண்டியாவின் முதல் பக்கத்தை விலக்கி, இவன் பக்கத்தைக் காணக் கைகள் தாமாக நீண்டன.

# என் மனக் குறை

**போட்டி 32**



உங்களுக்கு தனிப்பட்ட முறையிலோ சமுதாயம் தொடர்பாகவோ, தேசிய அளவிலோ அல்லது தலைவர்கள் சம்பந்தமாகவோ ஏதேனும் மனக் குறை இருக்கிறதா? யாரிடமாவது சொல்லித் தீர்த்துக்கொள்ள வேண்டும் என்று நினைத்ததுண்டா? இதோ எழுதி அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு உண்டு. இந்த அரைப் பக்கத்தைக் கத்தரித்து உறையிலிட்டு அதன்மீது ''என் மனக்குறை'' எனக் குறிப்பிட வேண்டும். குலுக்கல் முறையில் ஒருவருக்குப் பட்டுப் புடவை.

முடிவு தேதி: **24-12-84**

**இன்னும் 21 பட்டுப்புடவைகள் உள்ளன. நீங்கள் பட்டுப்புடவை பரிசு பெற 21 வாய்ப்புகள். வாரம் தவறாமல் போட்டியில் பங்கு பெறுங்கள்.**

**பட்டுப் புடவை பரிசுத் திட்டம்**

என் பெயர் ....................

விலாசம்: ....................

....................




# PHILIPS

## An exciting new composition. Arrangement by Philips.



The Philips Rack System is a perfectly compatible, technically superior and an aesthetic combination that brings you pure and powerful sound.



### 300 watts of undistorted power

That's AH 824. One of the best amplifiers available in the country today. With the most sophisticated features – like wide frequency response from 30 Hz to 20 kHz. Active tone control.

**The Electronic Turntable**

AF 834. Stroboscope with pitch control. Electronic motor control. And auto return.

**The Dolby Deck**

F 6121. The cassette deck with servo touch and metal compatibility.

**3 way 3 Speaker bass-reflex system**

AH 426 speakers with five segment LED bar graph to indicate power.

If music really means something to you, you've to listen to the Philips Rack System. Walk into the nearest Philips dealer's showroom and ask for a demonstration.

**Philips – the trusted Indian household name for over fifty years**

OBM/1787



# ஊனம் உடலில் இல்லை

## எஸ். சம்பத்குமார்

மரக் கட்டைகள் இரண்டு தோள்களைத் தாங்க, தொலைவில் நின்று கொண்டிருந்த பேருந்தைப் பிடிப்பதற்காகப் படபடப்புடன் வேகமாக நடந்தான் அவன்.

பேருந்து நிறுத்தத்தை அவன் அடையவும் ஓட்டுநர் கிளப்பவும் சரியாக இருந்தது.

கையைக் கஷ்டப்பட்டு உயர்த்தினான். ஓட்டுநர் அதைக் கவனிக்காதது மாதிரி ஆக்ஸிலேட்டரை அழுத்த அவன் கோபத்துடன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். நேரம் சென்றது. அதோ மீண்டும்அவன் எதிர்பார்த்த அந்தப் பேருந்து.

அவசர அவசரமாகக் கட்டைகளை எடுத்து மேல் படியில் வைத்துவிட்டு முன்புறம் வழியாக மெள்ள மேலே ஏறி இருக்கை ஏதேனும் இருக்கிறதா என்று கண்களால் துழாவினான். ஒன்றும் இல்லை.

உடல் ஊனமுற்றோர் இருக்கை... அதிலும் கறுப்புக் கண்ணாடி அணிந்த 'டிப்டாப்' இளைஞர் இருவர் அமர்ந்திருந்தனர்.

அவனுக்குப் பொறுக்கவில்லை. மெல்லப் பேசினான் அருகில் இருந்தவரிடம்.

''உடல் ஊனமுற்றோர் என்றால் யாரும் இப்போது மதிப்பதில்லை. வயதுக்குத்தான் மதிப்புக் கிடையாது என்றால் குறைந்தது உடலில் ஊனமுள்ளவன் என்பதற்காவது மதிக்கிறார்களா என்றால் அதுவும் இல்லை. என்ன படித்தும் என்ன பயன்? பண்பு வேண்டாம்?'' என்று நிறுத்தி அந்தக் கறுப்புக் கண்ணாடி இளைஞர்களை நோட்டம் விட்டான்.

அவர்கள் இருவரும் இவனைக் கவனித்ததாகவே தெரியவில்லை. இதற்குள் ஒருவர் இறங்குவதற்காகத் தன்னைத் தயார்ப்படுத்தி எழுந்துகொள்ள இவன் அதில் அமர்ந்து கொண்டான்.

அந்தக் கறுப்புக் கண்ணாடி இளைஞர்களை என்ன சொல்லி வெட்கப்பட வைக்கலாம் எனக் கண்ணை மூடி நினைக்க ஆரம்பித்தான்.

''சார்....'' குரல் கேட்டுக் கண்களைத் திறந்தான். திரும்பினான். கறுப்புக் கண்ணாடி இளைஞன் ஒருவன்.

''சார்.... சாந்தி தியேட்டர் ஸ்டாப்பிங்கா இது?''

தனக்கு இடம் தராத அவர்கள் மீது இருந்த கோபம் எல்லாம் வார்த்தைகளாக வெளிவந்தன, இவனுக்கு.

''ஆமாம்! இதுக்காகவா என்னைத் தொந்தரவு செய்யணும்? கண் தெரியாது? 'மானர்ஸே' தெரியலையே.''

கறுப்புக் கண்ணாடி இளைஞன் மெல்லிய குரலில் சொன்னான், எழுந்தவாறே.

''ஆமாம் சார்! எங்க ரெண்டு பேருக்கும் சின்ன வயசிலேருந்தே பார்வை கிடையாது சார்! தெரியாம உங்களைத் தொந்தரவு செஞ்சுட்டோம். மன்னிச்சுடுங்க சார்.''

சொல்லிவிட்டு இருவரும் தடுமாறிய படியே இறங்கிச் சென்று விட்டனர்.

இவனுக்கு, தனக்கு உடலில் மட்டும் ஊனம் இல்லை, மனத்திலும் கூடத்தான் என்பது புரியத் துவங்கியது.

---



ஜோசியர்: உங்க ஜாதகப்படி உங்க வீட்டில நடக்காத ஒன்று நடந்து இருக்கணுமே?

பெண்: ஆமாங்க நடக்காமல் இருந்த என் குழந்தை நேற்றைக்கு நடந்திருச்சு!

—நா. பழனிசாமி.



○ பூர்ணிமா ராவ்

## பார்த்ததும்

### பார்த்தது...

'ஹரிபிரசாத் — பூர்ணிமாராவ் காதல்; இதனால் ஜெயதேவிக்கும்பூர்ணிமாராவிற்கும் லடாய். ஷூட்டிக்கு அவுட்டோர் போன இடத்தில் என்னவோ ரசாபாசமாகி விட்டது; அதனால் பூர்ணிமா இனிஜெயதேவி யின் படத்திலிருந்து நீக்கப்படுவார்' என்று செய்தி வந்ததல்லவா?

ஆனால் என்ன காம்ப்ரமைஸ் நடந்ததோ தெரியவில்லை. இப்போது பூர்ணி, 'ஜெய'த்தின் படத்தில் தொடர்ந்து நடிக் கிறார். அரசு ஸ்டுடியோவில் 'விலாங்கு மீன்' படப்பிடிப்பு நடந்துகொண்டிருந்தது.

சாக்லேட் கலர் 'மிடி'யில் பூர்ணிமா ஏக குஷியாய் எகிறிக் குதித்து, அங்குமிங்கும் உலாத்திக் கொண்டிருந்தார்.

ஜெயதேவியின் படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்த 'செட்'டிற்குப் பக்கத்தில் உள்ள வேறு 'செட்'டில் இன்னொரு தெலுங்குப் படத்தின் படப் பிடிப்பு வேறு. அந்தப் படத்திலும் இதே பூர்ணிமாராவ் இதே நிலைத்தில் நடிக்கிறாராம்.

ஒரே கால்ஷீட்டில் இரண்டு படங்களில் மாறி மாறி நடிக்கும் அளவுக்கு பூர்ணி எப்போது 'பிஸி' ஆனார்?

நிழல்கள் ரவி போலீஸ் இன்ஸ்பெக்டர் வேடத்தில் ஒரு நாற்காலியில் அமர்ந்து கொண்டு வேர்க்கடலை கொறித்துக் கொண்டிருந்தார்.

ஜெயதேவி, ''காரை எடுத்துக்கொண்டு அங்கே வாங்கப்பா'' என்று சொல்லிவிட்டு, முன்னால் நடந்துபோய், ப்ளோருக்கு எதிரே இருந்த புல்வெளியில் நின்றுகொண்டார். காமிராவும் கேமிராமேன் அஸிஸ்ட டெண்டுகளும் ஜெயதேவியைப் பின்தொடர்ந்தார்கள்.

வந்து நின்ற வெள்ளை நிற இம்பாலா காரில் ஜெயதேவியின் கணவர் (ஹீரோ) ஹரிபிரசாத் ஏறி உட்கார்ந்து ஸ்டியரிங்கைப் பிடித்துக் கொண்டார். பூரணிமாராவ் அதே ஸீட்டில், அவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு ஒருமுறை வசனத்தை முணு முணுத்துப் பார்த்துக்கொள்ள, ''ஒரு மானிட்டர் பார்க்கலாம்'' என்றார் ஜெயதேவி. அதற்குள் ஹரிப்ரசாத் பூர்ணிமாவிடம் என்னவோ சொல்ல, 'ஹ...ஹா...ஹா...' என்றுஉரக்கச் சிரித்து, கும்மாளமாய்ச்சீட்டில் எம்பிக் குதித்தார் பூர்ணி.

பிறகு, ஜெயதேவிக்கு எரிச்சல் வராதோ? ஏற்கனவே வேறு ஹரிக்கும் பூர்ணிக்கும் ஒரு இகஇக. விளைவு ஜெயதேவியின் செயலில் உடனே தெரிந்தது.

''பூர்ணிமா, நீ எழுந்திரு! கேமிராவைக் கொண்டுபோய் பூர்ணிமாவின் பாயிண்ட் ஆப் வியூவில் வையுங்கப்பா!'' என்று உத்தரவு பிறப்பித்தார் ஜெயம்.

பூர்ணிமா துவண்ட முகத்தோடு காரை விட்டு இறங்கிக் கொண்டார். காமிரா இடம் பெயர்ந்து, கார் சீட்டில் போய் உட்கார்ந்து கொண்டது.

நிலவரத்தைப் புரிந்துகொண்ட ஹரி, கலவரப்படாமல் 'கம்'மென்று உட்கார்ந் திருந்தார்.

படத்தைத் தெலுங்கிலும் 'டப்' செய்து வெளியிடும் திட்டத்தில், நிறைய தெலுங்கு முகங்களையும் போட்டிருக் கிறாராம் ஜெயதேவி. சில முகங்களில் 'நான் ஆந்திரா' என்று எழுதி ஒட்டி இருக்கது.

### கேட்டது...

பல வெற்றிப் படங்களை எடுத்து, திரையுலகில் இன்னமும் நிலையான இடத்தை வகித்து வரும் இயக்குநர் முக்தா வி.சீனிவாசனைச் சமீபத்தில் சந்தித்தபோது-

# புதுமுகங்கள் கூட்டத்துக்கு

## கேட்டதும்

''தங்களுடைய அடுத்த படத் தயாரிப்பு என்ன?''

''எங்கள் புதிய தயாரிப்பாக 'ஒரு மலரின் பயணம்' என்ற படத்தை எடுக்கிறோம். இதில் கதாநாயகியாக சுஜாதா நடிக்கிறார். சந்திரபோஸ் இசை அமைக்கிறார்.''

''உங்கள் படங்கள் எல்லாமே ஹியூமர் டைப்பாகவே இருக்கிறதே... கொஞ்சம் வித்தியாசமாய் எடுத்தால் என்ன?''

''என்னுடைய ஒவ்வொரு படத்திலும் வித்தியாசமாகத்தான் சொல்வேன். தற்சமயம் வெளிவந்துள்ள 'இரு மேதைகள்' இரில் கலந்த ஹியூமர் சப்ஜெக்ட். தனிமனிதனின் மனிதாபிமான உணர்ச்சிகளை ஜனங்களுக்குக் காட்ட விரும்புகிறேன். அதைக் கொஞ்சம் ஹியூமராகச் சொல்கிறேன் அவ்வளவுதான்.''

''முக்தா பிலிம்ஸ் தவிர வேறு கம்பெனி களுக்குப் படங்கள் இயக்கினால் என்ன?''

''வேண்டிய நண்பர்களுக்காக ஒருசில படங்கள் செய்தேன். 'பலப் பரீட்சை', 'ஸ்ரீராமஜெயம்' போன்ற படங்கள் அப்படிச் செய்ததுதான். பிறகு, 'ஃப்ரி லேன்ஸாக'ச் செய்யக்கூடாது என்பதை என் கொள்கையாக வைத்துக் கொண்டு விட்டேன். என் சொந்தக் கம்பெனிக்கு நல்லமுறையில் படம் எடுத்தால் போதும் என்ற முடிவுக்கு வந்துவிட்டேன்.''

''ஏன் நீங்கள் புது முகங்களை அறிமுகப் படுத்துவதில்லை?''

''ஏற்கனவே அறிமுகம் செய்த புதுமுகங்களுக்குச் சான்ஸ் கிடைத்தால் போதும். அவர்களிலேயே பலர் பட்டினி கிடக்கிறார்கள். மேலும் அந்தக் கூட்டத் திற்கு ஆள் சேர்க்க விரும்பவில்லை. மேலும் என் படங்களின் கதாபாத்திரங்களின் தன்மைக்கேற்ப நான் நடிகர்களைத் தேர்வு செய்கிறேன். உதாரணமாக சிவாஜி கணேசன் என் மிகச் சிறந்த நண்பர். என்னைப் பற்றி அவருக்கு நன்றாகத் தெரியும். நான் எதிர்பார்ப்பதை மிக எளிதில் செய்துவிடுவார். ஒரு புது முகத்திடம் நான் இதுபோல் எதிர்பார்க்க முடியுமா?

''எனவே சூழ்நிலைக்கு ஏற்ப நான் நடந்து கொள்கிறேன்.''

''நீங்கள் சொந்தப் படக் கம்பெனி வைத்திருக்கிறீர்கள். எனவே ஒரு தயாரிப் பாளர் என்கிற நிலையில் மட்டும் இருந்து கொண்டு புதிய தொழில் நுட்பக் கலைஞர்களை அறிமுகப்படுத்தலாமே?''

''திறமை உள்ளவர்களை நான் நிச்சயம் பயன்படுத்துகிறேன். என் மனத்தில் நம்பிக்கை ஏற்படுத்துகிறவர்களை நான் கண்டிப்பாக முன்னேறச் செய்கிறேன்.

'''தம்பதிகள்' படத்தில் புதிய இயக்குநராக சாஜேந்திரனை அறிமுகப்படுத்தினேன். எனது அடுத்த படத்தில் சந்திரபோஸை இசை அமைக்க வைத்திருக்கிறேன். திறமை தெரிந்தால் பயன்படுத்திக் கொள்ளத் தவறுவதில்லை.

''திறமை உள்ளவர்கள், நான் இல்லா விட்டாலும் தானாகவே பிரகாசிக்க வாய்ப்புண்டு.

''முன்பு கம்யூனிஸ்ட் கட்சியில் இருந்தீர்களாமே?''

''ஆமாம். ஆரம்ப காலத்தில் கம்யூனிஸ்ட் டில்தான் இருந்தேன். ஜீவானந்தம், மணலி கந்தசாமி இவர்களது மறைவுக்குப் பிறகு, காமராஜரோடு காங்கிரஸில் பணியாற்றினேன். அவருக்குப்



முக்தா சீனிவாசன்

பிறகு சிவாஜியோடு சேர்ந்து பணியாற்று கிறேன். பதவிகளுக்காக அரசியலில் ஈடுபடுவது எனக்குப் பிடிக்காத விஷயம்.''

''எதுமாதிரிப் படங்களுக்கு வரவேற்பு இருப்பதாகக் கருதுகிறீர்கள்?''

''நான் எடுத்த படங்களை வைத்துத்தான் சொல்ல முடியும். எனக்கென்று சில கொள்கைகள் உண்டு. பெண்மையின் தியாகங்களில் பற்று உண்டு. மனிதாபிமான உணர்ச்சி அடிப்படையில் ஒருவரது மன எண்ணங்கள், மற்றவர் களுக்காகத் தன் வாழ்க்கையைத் தியாகம் செய்யும் கேரக்டர்களைக் கொண்ட படங்களைத்தான் நான் எடுக்க விரும்பு கிறேன். சற்று ஹியூமர் கலந்து படம் பண்ணுவதுதான் என் பாணி. அதை மாற்றிக்கொள்ளவும் நான் விரும்பவில்லை.''

—சம்பத்ஜி

படம்: ஸ்பைடர்மேன்

# ஆள் சேர்க்க வேண்டுமா?




ராகமாலிகா பட்டு சேலைகள்

சுகன் ஆர்கேட்,

நெ. 12பி, நாகேஸ்வரராவ் ரோடு, பனகல் பார்க் எதிரில்

தியாகராய நகர், சென்னை-600 017

(ஞாயிறு கடை உண்டு)

## மலரும் நினைவுகள்

# தோற்றவரையும் வாழ்த்திய பெருந்தகை

**அமரர் கல்கி நினைவு நாள் டிசம்பர் 5. அவரது மருமான் (தங்கை மகன்) வி. கோபாலன் இரு நினைவுகளைக் கல்கி வாசகர்களிடம் பகிர்ந்து கொள்கிறார்...**

ராஜாஜியைக் குருவாக வழிபட்டவர் கல்கி. அந்த உறவு முறையில் பயபக்தி உண்டு. அதே நேரத்தில் தோழமையும், சம உரிமையும் கலந்த விவாதங்களும் நடந்ததுண்டு. சுயநலக்கலப்பற்ற, தேச நலனை மட்டுமே எண்ணுகிற, விருப்பு வெறுப்பற்ற விவாதங்களால் தெளிவு பிறக்கும்.

1952 அல்லது 53ல் இந்திய சரித்திரத்திலேயே முதன் முறையாக சென்னை போலீஸார் வேலை நிறுத்தம் செய்தனர். அதை வன்மையாகக்கண்டிக்கும்படி முதல் மந்திரி ராஜாஜியிடம் உயர் போலீஸ் அதிகாரிகள் யோசனை செய்தனர். வேலை நிறுத்தத்தை நிபந்தனைகள் ஏதுமின்றி வாபஸ் பெற்றாலொழிய பேச்சு வார்த்தைகள் நடத்தக் கூடாது என்றனர். போலீஸ் துறையில் எந்த விதமான சலசலப்பையும் அனுமதிப்பது ஆபத்து என்ற கருத்து நிலவியது.

அன்று மாலை ராஜாஜி வழக்கம் போல் கல்கி வீட்டுக்கு வந்திருந்தபோது, கல்கி தாம் என்ன எழுத வேண்டும் என்று மனத்தில் எண்ணியிருந்தாரோ அதை வாய் விட்டுச் சொன்னார்.

''கடமை உணர்ச்சியையே சகலத்துக்கும் மேல் பிரதானமாகக் கருத வேண்டிய போலீஸ்காரர்களே வேலை நிறுத்தம் செய்கிறார்கள் என்றால் அவர்கள் நிலைமை அவ்வளவு மோசமாக இருக்கிறது என்றல்லவா அர்த்தம்! ஏன் வேலை நிறுத்தம் செய்கிறார்கள்? வீட்டுக்குப் போனால், மனைவி, 'அரிசியில்லை, பருப்பு இல்லை, குழந்தைகள் பட்டினி' என்கிறாள். மனத்தில் நிம்மதி கிடையாது. அவர்கள் குடும்பத் தேவையை அரசு கவனித்துக் கொண்டால்தானே அவர்கள் தங்கள் கடமையைச் செவ்வனே ஆற்ற முடியும்? போலீஸ்காரர்கள் ஊதியத்தை மிகவும் குறைவாக நிர்ணயித்து விட்டு, 'ஐயோ! அவர்கள் லஞ்சம் வாங்குவது அதிகரித்து விட்டதே' என்று புலம்புவதில் என்ன பலன்?''

இப்படி மனிதாபிமானக் கண்ணோட்டத்துடன் பிரச்னையை அணுகிப் பேசினார் கல்கி. காப்பி சாப்பிட்டபடியே கேட்டுக் கொண்டிருந்த ராஜாஜி பதில் ஏதும் கூறாமல் வேறு விஷயங்கள் பேசிவிட்டுப் போய் விட்டார். மறுநாள் பேச்சு வார்த்தைகள் ஏதுமின்றியே போலீஸாரின்கோரிக்கைகள் பலவற்றை ஏற்றுக்கொண்டு விட்டதாக அறிவித்தார். வேலை நிறுத்தம் உடனே வாபஸாயிற்று. அன்று ஒவ்வொரு கான்ஸ்டேபிளும் 'மகராஜன் நல்லா இருக்கோணும்' என்று ராஜாஜியை மனமார வாழ்த்தியிருப்பான்.

* * *

எழுத்தாளர்கையில்காசு சேருவது ரொம்ப அபூர்வம். அதற்கு விதிவிலக்கு கல்கி. நிறையச் சம்பாதித்தார். நல்ல விஷயங்களுக்கு நிறையச் செலவழித்தார்.

ஒரு முறை திருநெல்வேலியில் தேர்தலில் நின்று தோற்றுவிட்ட ஒரு பிரபலஸ்தர் நிதி நிலைமை மிகவும் சீர்குலைந்து போய் சென்னையில் ஒரு லாட்ஜில் தங்கியிருந்தார். அவர் கல்கிக்கு ஃபோன் செய்த மறு நிமிடம் என்னைக் கூப்பிட்டு ஐநூறு ரூபாயைக்கொடுத்து (அந்தக் காலத்தில் ஐயாயிரத்துக்குச் சமம்) உடனடியாக அந்தலாட்ஜுக்குச் சென்று குறிப்பிட்ட எண் அறையில் தங்கியிருந்தவரிடம் பணத்தைக் கொடுக்கும்படி கூறினார். எவ்வளவோ மாணவர்கள் படிப்பைத் தொடர்வதற்குப் பணம் இல்லாத நிலையில் அவரிடம் வருவார்கள். ஜிப்பாவை உயர்த்தி உள்ளே அணியும் வேஸ்ட் கோட் பாக்கெட்டில் கை விட்டு அகப்படும் பணத்தை எடுத்துக் கொடுத்து விடுவார். அதுமட்டுமல்ல, அந்த மாணவரின் பெயரையும் விலாசத்தையும் குறித்துக் கொண்டு மாதா மாதம் பணம் அனுப்புவார்!

-பேட்டி: எஸ்ஸார்

★ ராஜாஜி—கல்கி மனிதாபிமானக் கண்ணோட்டம்



# வட்டமேஜை



## என்ன ஜோக் கூறுவார் கமல்?

● 'நேரம் நல்ல நேரத்'துக்காக வியாழன் காலையிலிருந்தே ரெடியாகி விடுவோம் நாங்கள். இதுவரை வந்த எல்லாமே நல்ல நேரமாகப் போனாலும், பூர்ணத்தின் 'நேரத்தை' மந்திரத்தில் கட்டுண்டவர் போல் விட்டோம். இன்று கமல், நாளை நடக்கவிருக்கும் மிட்டெர்ம் டெஸ்ட்களையும் மறந்து 'நல்ல நேரத்தை' எதிர்நோக்கினோம். அதுவும் ஏமாற்றமளிக்காமல் இன்பமாகவே இருந்தது. கடைசியாக ஒரு ஜோக் கேட்கப் பட்டபோது என்ன சொல்வார் கமல்? 'ஏ' ஜோக்கா?' என்று நாங்கள் பரபரப் படைய அவர் ''அடுத்த வாரம் சொல்கிறேன்'' என்றதும் அனைவரும் விலாப் புடைக்கச் சிரித்துவிட்டோம். இதுவே நல்ல ஜோக்தான்!

ஸ்ரீரங்கம் பி. இந்திரா

● கல்கி 23-10-84 இதழில் 'சாலை சங்கீதம்' என்ற கட்டுரையில் 'வாக்மன்' கருவியை மாட்டிக் கொண்டு வாகனம் ஓட்டுவதில் உள்ள ஆபத்தைப் பற்றி எழுதியிருந்தீர்கள். சமீபத்தில் இத்தாலியிலும் சுவிட்சர்லாந்திலும் வாகனம் ஓட்டுனர்கள் வாக்மான் உபயோகிப்பது சட்டப்படி தடை செய்யப்பட்டுள்ளது. ''வாக்மானை மாட்டிக் கொண்டு வாகனம் ஓட்டுவது என்பது கண் பார்வை சரியில்லாதவர்கள் மூக்குக் கண்ணாடி அணியாமல் கார் ஓட்டுவதற்குசமாகும்'' என்று ஓர் இத்தாலிய நீதிபதி தமது தீர்ப்பில் கூறியுள்ளார்.

பம்பாய் லட்சுமி கண்ணன்

● டி.வி.யில் நல்ல நிகழ்ச்சியைப் பார்த்த மாத்திரத்தில் (வாசகர் பங்கு) அடுத்த ஆண்டு லைசென்ஸ் வாங்க வசதியாக ஐம்பது பைசாவுக்குக் குறையாமல் உண்டியலில் போடுவதாக எழுதியிருந்தார் சென்னை சரஸ்வதி. வருடக் கடைசியில் ஐந்து ரூபாய் கூடச் சேராதே என்பதை நினைத்தபோது மனத்திற்குக் கஷ்டமாக இருந்தது சார்!

கிருஷ்ணகிரி ஆர். பூபாலன்

● சென்ற 49 ஆண்டுகளாக மேற்கு மாம்பலத்தில் சிறுவர் சிறுமியர்களுக்குக் கல்வியையும், ஒழுக்கத்தையும் அளிப்பதைக் குறிக்கோளாகக் கொண்டு நடத்தப்பெறும் ஸ்ரீ சாரதா நடுநிலைப் பள்ளிக்கு சமீபத்தில் ஏற்பட்ட புயலாலும் மழையாலும் பெரும் சேதம் ஏற்பட்டுள்ளது. சுமார் 2500க்கும் மேற்பட்ட மாணவ மாணவியர் கல்வி பயிலும் இப்பள்ளி தனியார் பள்ளியாக இருப்பதால் உங்களிடமிருந்து இயன்ற அளவு நிதி உதவியை எதிர்பார்க்கிறது.

The Secretary,
Cyclone Relief committee,
Sri Saradha Middle School, Madras-33

● பகவான் ஸ்ரீ சத்ய சாய் பாபாவின் வண்ண அட்டைப் படத்தில் அருள் மணக்குது. அவரைப் பற்றிய கவர் ஸ்டோரியில் (பாபாவுடன் ஒரு நாள்) அவரது புகழ் மணக்குது. அவர்தம் பக்தர்களுக்குப் பக்தி பரவசமாய் இருக்குது.

அயன்புரம் த. சத்தியநாராயணன்

● பாகிஸ்தானில் வாழும் மக்கள் ''நாங்கள் இரக்கமுள்ள ஒரு சர்வாதிகாரியை எதிர்பார்க்கிறோம்'' என்று கூறுவது அவர்களது நைந்துபோன இதயத்தின் அழுகைக் குரலாகத்தான் கேட்கிறது.

பட்டிவீரன்பட்டி கா. மாரிமுத்து

● ஸ்வராஜ்பால் விவகாரத்தில் பம்பாய் நீதிமன்றம் வழங்கிய தீர்ப்பையும் அதற்கு முன் இருந்த நிலைமைகளையும் விளக்கி, உண்மையை உலகிற்கு உணர்த்திய கல்கிக்கு எனது மனமார்ந்த பாராட்டுகள்.

சென்னை - 5 எஸ். வி. ஆர்.

● தேர்தல் வரும் நேரத்தில் பல சலுகைகளை அரசு அறிவிப்பது மக்களை ஏமாற்றுவதாகும். அமைச்சர் பொன்னையன் ''400 கோடி செலவில் ரசாயன ஆலை தமிழ் நாட்டில் அமைக்கப்படும். அதற்கான மத்திய அறிவிப்பு தேர்தலுக்கு முன்னதாக வெளியிடப்படும்'' எனக் கூறியுள்ளார். இவ்வளவு நாள் தமிழ் நாட்டில் ஒன்றுமே செய்யாமல் இப்போது இது செய்கிறேன், அது செய்கிறேனென்பதுதேர்தலை முன்வைத்துத்தான். இதுபோல் பொறுப்பான பதவியில் உள்ளவர்கள் தேர்தல் நேரத்தில் ''ஜோக்'' அடிப்பதை நிறுத்த வேண்டும்.

வாணியம்பாடி இராதாகிருஷ்ணன்.

(கடைசிக் கடிதம் பரிசு பெறுகிறது)

# பொங்கி வரும் கற்பனைக்கு
# போதுமோ ஒரு தூரிகை!



நினைவுகள் நிறைந்திடும் அழியாத
கோலமே வாழ்க்கையெனும் அற்புதம்.
பாசம், நேசம், உல்லாசம், பெருமிதம் போன்ற
நவரசம் ததும்பும் தருணங்கள் எங்கும்,
எப்போதும் நேரலாம்.

அத்தருணமே அவற்றைப்
புகைப்படமாக எடுத்திடுவீர்! குறிப்பாக,
பிளாக் & ஒயிட் பிலிமில் எடுத்தால்
அவை காலமெல்லாம் மங்காது.

புகைப்படங்கள்.

என்றென்றும் வாழும் பசுமையான
நினைவுச் சோலைகள்.

**மனம் அள்ளும்**
**நினைவுகளை**
**சிறை கொள்ளும்!**






**இந்து ரோல் பிலிம்**
**மற்றும் ப்ரோமைடுகள்**

Sista's – HPF.237.84 TM

# 7



## ஏழு நாடுகளில் எட்டு வாரங்கள்

ஹாம்பர்கையும் அதன் சுற்றுப்புறங்களையும் பார்த்து முடித்த கையோடு பெர்லின் புறப்பட்டோம்.

பெர்லினில் போய் அதன் டெகல் விமான நிலையத்தில் இறங்குவதற்கு முன் சில முக்கிய விவரங்களைத் தெரிந்துகொள்ள வேண்டும். மேற்கு ஜெர்மனியின் பெடரல் அமைப்பிலான சில மாநிலங்களோடு சேர்த்து எண்ணப்பட்டாலும் பெர்லின் தனியான அரசியல் நிலையுள்ள (Special Political area) பிரதேசம். பிரதான ஜெர்மன் நிலப்பரப்பிலிருந்து ஒட்டுதலின்றி விலகிக் கிழக்கு ஜெர்மனியின் நடுவில் சிக்கியுள்ள பெர்லின், மேற்கு பெர்லின் — கிழக்கு பெர்லின் என இரண்டாகப் பிரிந்திருக்கிறது. மேற்கு பெர்லினுக்கு சுதந்திர பெர்லின் என்றும் ஒரு பெயர் சொல்லப்படுகிறது. இரண்டாவது உலக மகாயுத்தத்துக்குப் பின் இந்தக் கம்பீரமான பெரிய நகரம் (Greater Berlin) இரு பகுதிகளாகப் பிரிந்து பின்னர் குறுக்கே ஓர் அசிங்கமான சுவரும் முளைத்து விட்டது. இந்தச் சுவருக்கு முன்னும் பின்னும் பல துயரங்கள் — மரணங்கள் மனித உறவின் பாதிப்புகள் மறைந்துள்ளன. ஒரே இனம்- ஒரே மொழி — ஒரே வரலாறு — ஒரே கலாசாரம் உள்ள மக்களைக் கேவலம் ஒரு சுவர் நடுவே வந்து பிரித்து விட்டது. சந்தித்துக் கலந்து பழகாமல் தடுத்துவிட்டது.

ஹாம்பர்க்கிலிருந்து நாங்கள் பெர்லினுக்கு மேற்கு ஜெர்மானிய லுஃப்தான்ஸா விமானத்தில் பறக்கவில்லை. லுஃப்தான்ஸா விமானங்கள் பெர்லினுக்குப் போக முடியாது. மேற்கு ஜெர்மனியின் முக்கிய விமான நிலையங்களிலிருந்து பெர்லினுக்கான பயணங்களை 'பான் அமெரிக்கன்' விமானம் மூலம் செய்ய வேண்டியிருக்கிறது. நாங்களும் ஹாம்பர்க்கிலிருந்து மேற்கு பெர்லினுக்குப் பான்அமெரிக்கன் விமானத்தில் சென்றோம்.

மேற்கு பெர்லினுக்குத் தனி அரசியல் அந்தஸ்து வழங்கப்பட்டிருப்பதற்குச் சில காரணங்கள் உண்டு. இரண்டாவது உலக மகாயுத்தத்தில் நேச நாடுகளிடம் ஜெர்மனி தோற்ற பின் பிடிபட்ட ஜெர்மனியானது, அமெரிக்கா, பிரிட்டன், ஃபிரான்ஸ் சோவியத் யூனியன் ஆகிய நாடுகளைச் சேர்ந்த இராணுவதளபதிகளிடம் இருந்தது. பெர்லின் பெருநகரப் பகுதியின் நிர்வாக முப்வெற்றிபெற்ற நான்கு வல்லரசுகளின் கட்டுப்பாட்டில் இருந்தது.

1945ம் ஆண்டு ஜூலை 17 முதல் ஆகஸ்டு 2ம் தேதிவரை பெர்லினுக்கு அருகேயுள்ள போட்ஸ்டாமில் நடைபெற்ற முப்பெரும் நேச நாடுகளின் உச்சகட்ட மகாநாடு சில முக்கிய முடிவுகளைச் செய்தது. பிரிட்டனின் அட்லி, அமெரிக்காவின் ட்ருமன், சோவியத் யூனியனின் ஸ்டாலின் ஆகியோரே போட்ஸ்டாமில் சந்தித்த வல்லரசுத் தலைவர்கள். நடுநடுவே சிறு சிறு தகராறுகளுடனும், மனவேறுபாடுகளுடனும் 1947 வரை இந்தக் கூட்டு நிர்வாகமே பெர்லினைச் சமாளித்தது.

ஜெர்மனியைக் கைப்பற்றிய நான்கு வல்லரசுகளில் அமெரிக்கா, பிரிட்டன் முதலிய மேற்கத்திய வல்லரசுகளுக்குத் தங்கள்

## பெர்லின் சில விவரங்கள்




○ பிரிவுபட்ட பெர்லின் நகர் (மேற்கு)



ஏர் லிஃப்ட் நினைவுச்சின்னம் டெம்பிள் ஹாஃப்

பங்கான மேற்குப் பகுதி ஜெர்மன் பிரதேசத்தைக் கட்டிக்காத்து வளர்க்கவேண்டும் என்ற கட்டாய நிலை 1947 இறுதியிலேயே ஏற்பட்டுவிட்டது. 1948 தொடக்கத்தில் லண்டனில் கூடிய மேற்கத்திய வல்லரசுகள் இந்த முடிவுக்கு வந்தன. இதன் விளைவாக சோவியத் யூனியன் நேசநாடுகள் கூட்டு நிர்வாகக் கவுன்சிலிலிருந்து விலகியதுடன் Allied Control Council மேற்கொண்டு கவுன்ஸில் கூட்டங்களில் கலந்துகொள்வதில்லை எனப் பிரகடனப்படுத்தியது. கிழக்கு ஜெர்மனியை உருவாக்குவதில் கவனம் செலுத்தியது.

தொடர்ந்து ஏற்பட்ட கருத்து மாறுபாடுகள் முற்றி 1948 ஜூன் 24ந் தேதி மேற்கு ஜெர்மனியின் இதர பகுதிகளிலிருந்து மேற்கு பெர்லினை முழுமையாகத் துண்டித்தது சோவியத் இராணுவ நிர்வாகம். அதாவது கிழக்கு ஜெர்மனிக்கு



பெர்லின் சுவர் மேற்குப் பகுதியில் ஒற்றுமையை அவாவி வரையப்பட்ட ஒரு சுவரோவியம்



அயல் நாட்டுப் பயணிகள் பரிசோதனைக்குப் பிறகு கிழக்குபெர்லினுக்குள் அனுமதிக்கப்படுவார்கள்

நடுவில் சிக்கிக் கொண்டிருக்கும் மேற்கு பெர்லினுக்குள் சாலை, இரயில்வே, நீர்வழிகள் தகவல் தொடர்புகள் இவற்றைத் தடை செய்தது. இதற்குப் பெர்லின் தடை Berlin Blockade என்று பெயர். மேற்கத்திய வல்லரசுகளுக்கும் மேற்கு பெர்லினுக்கும் இது ஒரு பெரிய சவாலாக அமைந்தது. இரண்டு மில்லியன் மேற்கு பெர்லின் மக்கள் உணவு முதலிய அத்தியாவசியத் தேவைகளுக்குத் திண்டாடிப் போகாமல் சுமார் பத்து மாத காலம் விமான மூலம் மேற்கத்திய வல்லரசுகள் சப்ளைகளைச் செய்து சமாளிக்க வேண்டியிருந்தது.

தொடக்கத்தில் தினசரி 120 டன்னில் ஆரம்பித்துப் பின் நாள் ஒன்றிற்கு 4000 டன் வரை விமானம் மூலம் மேற்கு பெர்லினுக்கு அத்யாவசியப் பண்டங்களைச் சப்ளை செய்தார்கள். இதற்காகவே மிகக் குறுகிய காலமான மூன்று மாத அவகாசத்தில் டெகல் விமான தளம் அமைக்கப்பட்டது. 1949 ஏப்ரலில் ஒரே ஒரு நாளில் மட்டும் வரலாறு கண்டிராத அளவு 12,940 டன் அத்தியாவசியப் பண்டங்கள் விமானம் மூலம் பெர்லினுக்குக் கொண்டுவரப்பட்டன. ஒரு விமானமும் மற்றொரு விமானமும் இறங்குவதற்கான இடைவெளி நேரமே ஒன்று அல்லது இரண்டு நிமிஷம்தான் என்கிற அளவு மேற்கத்திய வல்லரசுகள் இந்தச் சவாலை ஏற்றுச் சமாளித்தன. மேற்கு பெர்லின் மக்கள் தவித்துத் திணறாமல் காப்பாற்றினார்கள். இந்தப் பத்து மாதங்களுக்கு மேற்பட்ட சோதனை காலத்தில் மட்டும் 1.8 மில்லியன் டன் அத்தியாவசியப் பண்டங்கள் 277,000 தடவைவிமானங்கள் மூலம் மேற்கு பெர்லினுக்குள் வந்திருக்கின்றன.

எட்டு ஜெர்மானியர்கள் உட்பட மொத்தம் எழுபது பேர் இந்த மாபெரும் பணியில் உயிரிழந்திருக்கிறார்கள். இவர்களுக்கான நினைவுச் சின்னத்தை (Airli't memorial) டெம்பிள் ஹாஃப் விமான நிலையத்தில் இன்

நா. பார்த்தசாரதி

றும் காணலாம். இந்த 'டெம்பின்ஹாவ்' விமான நிலையம் போதாமல்தான் 'ஏர் லிஃப்ட்' காலத்தில் 'டேகல் விமான நிலையம்' அவசரம் அவசரமாக அமைக்கப்பட்டது. இன்று முன்னது மேற்கு பேர்லினின் இராணுவ விமான தளமாகவும் பின்னது பயணிகளுக்கான விமான நிலையமாகவும் விளங்குகிறது.

சுமார் பத்து மாத காலம் நீடித்த வழி முடக்கத்தை 1949 மே 5ந் தேதி நீக்கினார்கள். அதே மே 23ந் தேதி மேற்கு ஜெர்மனி தனி நாடாகப் பிரகடனப்படுத்தப்பட்டு அடிப்படைச் சட்டங்கள் அறிவிக்கப்பட்டன. நான்கு மாதங்கள் கழித்து அக்டோபரில் கிழக்கு பேர்லினைத் தலைநகராகக் கொண்ட கிழக்கு ஜெர்மனியும் மற்றொரு தனி நாடாகப் பிரகடனப்படுத்தப்பட்டது.

அமெரிக்கா முன்னின்று அமைத்த ஐரோப்பியப் புனரமைப்புத் திட்டத்தின் கீழ் மேற்கு பேர்லின் எடுத்துக் கொள்ளப்பட்டது. மேற்கு பேர்லின் பொருளாதாரத்தைச் சீராக்க மேற்கு ஜெர்மனி ஒரு நெருக்கடி நிலைப் பொருளாதாரத்திட்டத்தை அறிவித்தது. மேற்கு பேர்லினை ஒன்றுபட்டு பாதுகாக்கவும், வளர்க்கவும் மேற்கத்திய நாடுகள் உறுதிபூண்டன. மறுபடியும் தலைவலி ஆரம்பமாயிற்று. கிழக்கு பேர்லின் மேற்கு பேர்லினோடிருந்த டெலிபோன் தொடர்புகளைத் துண்டித்தது. இரண்டு பேர்லினுக்கும் ஒன்றாயிருந்த டிராம் போக்குவரத்து, பஸ் தடங்கள் எல்லாம் அடிக்கடி இடையூறுகளுக்கு உள்ளாயின. மேற்கேயிருந்து கிழக்கே பஸ், டிராமில் போகக் கூடப் பிரயாணப் பத்திரங்கள் தேவை என்ற நிர்ப்பந்தமும் பயமும் வந்தன. ஒரே நகரின் இரு திசைகளில் ஒரே இன மக்கள் அவதிப்பட்டனர். மேற்கு பேர்லினில் குடியிருக்க நேர்ந்த ஜெர்மானியர்களுக்குக் கிழக்குப் பகுதியில் சொத்து, சுகம், நிலபுலங்கள் இருந்தாலும் அவற்றைக் கண்காணிக்கவும், ஆளவும் அனுபவிக்கவும் முடியாதபடி முட்டுக்கட்டைகள் ஏற்பட்டன. முடிவில் இரண்டு பகுதிகளில் உள்ள பல டிராம்கள் அந்தந்தப் பகுதியோடு முடிந்து மற்ற பகுதிக்குள் பிரவேசிப்பதே முறிந்து போயிற்று.

1954ல் அன்றைய பிரிட்டிஷ் வெளியுறவு அமைச்சர் அந்தோனி ஈடன் Anthony Eden ஜெர்மனியின் எல்லாப் பகுதிகளையும் ஒன்றுபடுத்தும் யோசனையைத் தெரிவித்து அது சோவியத் யூனியனால் நிராகரிக்கப்பட்டது. மூன்று மேற்கத்திய வல்லரசுகளும் பேர்லினின் (மேற்கு) தீவிர வளர்ச்சிக்கும் பொருளாதார முன்னேற்றத்துக்கும் முனைந்து பாடுபடுவது என்று தங்களுக்குள் முடிவு எடுத்தன. கிழக்கு ஜெர்மனி வார்ஸா உடன்படிக்கை பிளாக்கிலும் மேற்கு ஜெர்மனி நாட்டோ (Nato) விலும் நெருங்கின.

இதன் பின்னரும் பல உராய்வுகள், மனத்தாங்கல்கள். கிழக்கு ஜெர்மனியிலிருந்து நிறையப் பேர் வெளியேறி மேற்கு பேர்லினுக்குள் வந்து தங்குவதும் அங்கிருந்து விமானம் மூலம் ஜெர்மனியின் வேறு பகுதிகளுக்குப் போய்விடுவதும் அதிகரித்தது. 1961ம் வருடம் ஜூலை மாதத்தில் மட்டும் சுமார் 30,000 பேர் கிழக்கிலிருந்து மேற்கே வெளியேறியிருக்கின்றனர். இதனால் கணிசமான மக்கள் தொகையையும் தொழில் சக்தியையும் (Labour force) இழக்க நேரிட்டுவிடுமோ என்ற உணர்வு கிழக்கே ஏற்பட்டது.

1961ம் ஆண்டு ஆகஸ்டு 13ந் தேதி அதிகாலை இருள் பிரிந்ததும் இரண்டு பேர்லின் வாசிகளுக்கும் ஓர் அதிர்ச்சி காத்திருந்தது. நகரின் ஒரு பகுதியிலிருந்து மறு பகுதிக்குப் போக முடியாமல் சிமெண்டுத் தூண்களை நட்டு முள் கம்பி வேலி போட்டுத் தடுக்கப்பட்டிருந்தது. கிழக்கு பேர்லின் பகுதியிலிருந்து மேற்கு பேர்லின் பகுதியைச் சேர்ந்த தொழிற்சாலைகளுக்கு அன்றாடம் வேலைநிமித்தம் செல்லும் 60,000 தொழிலாளர்கள் என்ன செய்வதென்று அறியாமல் திகைத்துத் திணறினர். இரண்டு பேர்லினுக்கும் நடுவே சகஜமாயிருந்த பாதாள ரயில் போக்குவரத்தும் இடைமறித்துத் தடுக்கப் பட்டிருந்தது. செக் போஸ்ட்டுகள் ஏற்பட்டன. கிழக்கு பேர்லின் வாசி அனுமதியின்றி மேற்கே போக முடியாதென்ற நிலை ஏற்பட்டது. மேற்கே இருந்து கிழக்கே வருவோருக்கும் தடைகள்.

பின்பு நாளடைவில் இரண்டு பேர்லினையும் பிரிக்கும் 45 கி. மீ. நீளச் சுவரும், மேற்குப் பகுதியையும் கிழக்கு ஜெர்மனியையும் பிரிக்கும் 125 கி. மீ. நீளச் சுவரும் ஏற்பட்டுவிட்டன. கிழக்கேயிருந்து யாராவது சுவரைக் கடக்க முயன்றால் மிஷின்கன் சகிதம் காவலர்கள் சுடக்காத்திருக்கிறார்கள். சுவரின் மேற்குப் பகுதியில் எந்தக் கெடுபிடியும் இல்லை. சிலர் சுவரையும் பிரிவினையையும் எதிர்த்து மேற்குப் பக்கச் சுவரிலே கோஷங்களை எழுதியிருக்கிறார்கள். ஆனால் சுவரின் கிழக்குப் பகுதியில் சுவரை நெருங்கவே முடியாது. இதுதான் பேர்லின் சுவரின் கதை. இந்த வரலாறு புரிந்தால்தான் பேர்லினைப் பற்றிய மற்ற விஷயங்களை ஒருவர் புரிந்துகொள்ள முடியும்.

(தொடரும்)

---



**இங்கே வேலை கிடைக்கும்!**

இந்தியாவிலேயே "வேலைக்கு ஆள் தேவை" என்ற போர்டுகள் தொங்குவது சிவகாசியில் மட்டும் தான்.

–திசை முத்து.

மிக சமீபத்தில் தஞ்சை மாவட்டத்தில் ஒரு சூறாவளி சுற்றுப் பயணம் செய்தோம். நிச்சயமாகத் தேர்தலை முன்னிட்டு இல்லை. அமோக விளைச்சலாலும் ஏற்படக்கூடிய பிரச்னைகளை அறிந்து வரத்தான்.

நிறைய லாரிகள் எதிரில். ஒவ்வொரு லாரியிலும் நெல் மூட்டைகள்தான்.

''குறுவை நெல்லு! போவுது பாத்தல்ல? இஞ்ச இப்படி வெளஞ்சாத்தான் மெட்ராஸ் பயலுவெல்லாம் சப்பணம் போட்டு சாப்பிட முடியும். என்ன சொல்றே?''

நீடாமங்கலம் ரயில்வே க்ராஸிங்கில் ஒரு கண்கொள்ளாக் காட்சி. ஸ்டேஷனுக்குப் பக்கத்திலேயே லெவல் க்ராஸிங். அனுமார் வால் நீள சரக்கு ரயில் நீளமாய் நின்று கொண்டிருக்க, ஒவ்வொரு பெட்டியும் பசியுடன் வாய் திறந்திருக்க, ஒவ்வொரு பெட்டிக்கு அருகிலும் ஒவ்வொரு லாரி. நெல் மூட்டைகள் லாரியிலிருந்து வாகனுக்கு மாறிக் கொண்டிருந்தன.



# தஞ்சைத் தரணியிலே தவமிருக்கும் நெல்மணிகள்

அப்புறம் வழி நெடுக மன்னார்குடிக்குப் போய்ச் சேரும்வரை நெல் வாசனைதான். சாலையோரங்களில் மூட்டைகளைச் சுமந்து கொண்டு வண்டி மாடுகள் கால் மாற்றிக் கொண்டிருந்தன. சாலையிலேயே நெல் மூட்டைகள் ஓர் ஓரத்தில் அடுக்கப்பட்டிருந்தன. மன்னார்குடி ராஜகோபாலசுவாமி கோயிலின் ஆயிரங்கால் மண்டபத்தை (காலியாய் இருக்கும்போது பார்க்க வேண்டும் நீங்கள். சமுத்திரம் மாதிரி இருக்கும். 'ஹா' என்று கத்தினால் 'ஹா', 'ஹா' என்று எதிரொலிக்கும்) மூலவர் ராஜகோபால சுவாமியும், அவர் தர்மபத்தினி செங்கமலத் தாயாருமாய்ச் சேர்ந்து அரசுக்கு இரவல் கொடுத்திருக்க, மண்டபம் முழுக்க நெல் மூட்டைகள். மூட்டைகளுக்கு இடையில் முகமூடிக் கொள்ளைக்காரர்கள் பதுங்கிக் கொண்டால் போலீஸ் நிச்சயம் கண்டு பிடிக்க முடியாது. அப்படிப் பதுங்குபவர்களை மூச்சுத் திணறலில் நேராக வைகுந்தம் போய்ச் சேர்ந்து விடுவார்கள். நோ வெளிச்சம். நோ காற்றோட்டம். நோ இடைவெளி. டௌன் பஸ் நெரிசல்தான்.

நெல்லைப் பாதுகாக்கக் கோயில் மண்டபம் தானா? ஏன் இப்படி?

ஸ்ரீமான் பொதுஜனம், ஸ்ரீமான் விவசாயி, ஸ்ரீமான் அரசு அலுவலர் என்று மூன்று ஸ்ரீமான்களைச் சந்தித்தால் இப்படியும் அப்படியும் போய், மெல்லுவதற்கு நிச்சயம் விஷயம் கிடைக்கலாம் என்று முடிவெடுத்தோம்.

உள்ளூர் ஆசிரியர் ஒருவர் மாட்டினார். சொன்னார்—எதிரில் இருக்கும் எங்களையே அரசாகப் பாவித்து.

''எலே... 'Direct Purchase System'னு கொண்டு வந்தே. சரி. கடையால யாவாரி இருந்து தட்டிப்பிட்டுப் போயிரக் கூடாதேன்னு. நீ இந்த ஸிஸ்டம் கொண்டு வந்தே. சரி. இல்லேங்கல்லே. ஆரம்பிச்சு எத்தனை போகம் கண்டிருப்பே. இன்னித் தேதிவரை கொள்முதல் பண்ற நெல்லை யெல்லாம் சாக்கிரதையா வெச்சிக்க கோடௌன் கட்டினியாலே? அந்தக் காலத்தில சாமி கண்ணைக் குத்திப் பிடும்னு பயந்து கோயிலைக் கட்டினானுவ. மாமாங்க குளம் மாதிரி மண்டபம் கட்னானுவ. நீ 'இதோ ஆயிருச்சி இதோ ஆயிருச்சி'னு கோயில் மண்டபத்திலேயே அத்தனை மூட்டையையும் அடுக்கி வெச்சிட்டே. அட, மண்டபத்தில மாத்திரமான்னா கெடையாது. பிராகாரத்தை விட்டு வெக்கலே. அங்கியும் அடுக்கிப்புட்டே. மூட்டை அடுக்கறவன் படியேற வசதியா இருக்கட்டுமேன்னு படியிலேயும் கூட நெல்லு மூட்டையைப் போட்டுட்டே. திங்கற சோறுன்னு ஒரு பய நெனைக்கிறானா? அதையே மெரிச்சி மெரிச்சு மேலே ஏறுறான். எத்தினி நாளைக்குஇப்படி உளுடனாக்கட்டி காட்டுவே.... இல்ல கேக்கறேன்...''

மழை அடித்தாலும் சரி, வெயில் அடித்தாலும் சரி, புயல் அடித்தாலும் சரி கவர்ன்மெண்ட் வாங்கிப்போட்ட நெல் தானே. முளை விட்டால் என்ன, புழு

வைத்தால் என்ன? இந்த மாதிரி வெயிலிலும் மழையிலும் அவதிப்பட்டுக் காய்ச்சல் கண்ட அரிசியெல்லாம் ரேஷன் கடைகளிலும், முதலமைச்சர் சத்துணவுத் திட்டங்களிலும் இறைபடடு, பெரியவர்கள், குழந்தைகள் பாரபட்சமின்றி விநியோகம் ஆகிறது. சத்துணவுத் திட்டத்தில் அப்புறம் சத்தெங்கே இருக்கும்?

மன்னார்குடியிலிருந்து தஞ்சாவூர் போகும் பாதை. வடுவூரை நெருங்கும் சமயம். சாலையோரத்தில் சில இளைஞர்கள் சாய்மானமாக நிறுத்தி வைக்கப்பட்ட துவை கல்லில் போரடித்துக் கொண்டிருந்தார்கள். ஒருவர் நின்று மேற்பார்வையிட்டார். மீசையும் தாடியும் கருநரை. அவரை அணுகினோம்.

''நெல்லெல்லாம் நீங்க வியாபாரிக்குக் கொடுக்கிறீங்களா, இல்ல கவர்ன்மெண்டுக்கா?''

''யாவாரிகிட்ட எதுக்கு?'' என்ற முருகையன் தஞ்சைத் தரணிக்கே உரிய வெண்டை வார்த்தை ஒன்றை உதிர்த்தார். ''மூணு மாசம் இளுத்தடிப்பான். நமக்கு கவர்ன்மெண்டுதான் சரி. யாவாரி அறுவது கிலோ நெல்லுக்கு எம்பத்ரெண்டு ரூவா கொடுக்கறான். கவர்மெண்ட்ல தொண்ணூறு ரூவா. பூச்சி மருந்து, உரம் எல்லாம் கொஞ்சம் இனுமாக் கொடுக்கறாங்க?''

''நெல்லு போடப் போனா அஞ்சு நாள், ஆறு நாள் காத்திருக்கணுமாமே, கவர்மெண்ட கிட்டப் போடறதுன்னா?''

''அட அதெல்லாம் பாத்தா ஆகுமா? அந்த அஞ்சு நாள்ல நீ என்ன வெட்டி முறிச்சிடப் போறே? எனக்கு அஞ்சி மா. மாக்கு பத்து மூட்டை நெல். இந்தப் பயலுவல்லாம் என் சொந்தக்காரனுவதான். ஆளுக்கு ஒர் ரூவா பணம் ஒரு நாளைக்கு. அப்புறம் மூணு வேளை சாப்பாடு, மூணு மரக்கா அரிசி, இத்தனையும் கொடுத்து வேலை வாங்கறேன். எனக்கு எவ்வளவு செலவு? யாவாரிகிட்ட கொறைச்ச பணத்துக்குக் குடுத்துக் கட்டுப்படியாவுமா? இப்ப வான்னுவான், இன்ச வான்னுவான். கவர்மெண்ட்ல காத்துக்கிட்டிருந்தாலும் ரூவா கொடுக்கிறானில்லே உடனே?'' என்று எங்களையே திருப்பிக் கேட்டார்.

கிளம்புவதற்கு முன்னால் இன்னொரு விவசாயி கண் ஜாடை காட்டி எங்களை அழைத்தார். அருகில் போனோம்.

''அவர் கட்சிக்காரருங்க. அப்படித்தான் பேசுவாரு. நெசமா இந்தக் கவர்மெண்ட் விஷயத்துல என்ன நடக்குது தெரியுங்களா?'' என்று கேட்டார்.

''சொல்லுங்க'' என்றோம் ஆவலுடன்.

''நாம வண்டி கட்டிக்கிட்டு நெல் வாங்கற எடத்துக்குப் போனா அங்க நமக்கு முன்னாடியே நூறு பேர் இருப்பானுவ. கவர்மெண்ட் ஆளு ஒருத்தரு பெஞ்சு போட்டு உக்காந்திருப்பாரு. அவருக்கு ஹெல்ப்பரு ஒருத்தரு. லாரி வேணும் சாக்கு வேணும்னு ஓடியிருப்பாரு. நம்ம கையில டோக்கனைக் குடுத்து நிப்பாட்டிடுவான். வெயில்னு காயணும், மழைன்னு நனையணும். இதே மூட்டைக்கு ரெண்டு ரூவா குடுத்தா நமக்கு முன்னால டோக்கன் கெடைக்கும். அஞ்சி ரூவான்னு நாமதான் மொத ஆளு. உடனே எடை போட்டுக் காசை வாங்கியாந்திரலாம். ஒரு எம். எல். ஏ. ஆளு துண்டு போட்டுக்கிட்டு வந்தான்னா அவனுக்குத்தான் மொத எடம். எடையிலயும் நெறையத் திருட்டு வேலை நடக்குது. கவர்மெண்ட் திட்டம் நல்ல திட்டம்தான். செயல்படுத்தும் முறை சரியில்லை... ஊடால இந்த அணுவுணிப் பயல்லாம் பூந்து போடற ஆட்டமிருக்கு பாருங்க....''

கணபதி அக்ரஹாரத்தில் (புகழ் வாய்ந்த அய்யம்பேட்டைக்கு அருகில் இருக்கும் ஒரு கிராமம்) பயிற்சி வழித் தொடர்புத் திட்டத்தின் ஊர் நல அலுவ -ராகப் பணியாற்றும் திரு ஆர். குலசேகரனை அதிகாலையில் அவர் சைக்கிளில் தாவி ஏறுகையில் பிடித்தோம். அவர் வாயைக் கிண்டினோம்.

''ரெண்டு தரப்பிலேயும் நெறைய நியாயமிருக்கு. சரியான கொடௌன் வசதி இல்லாம டி.பி.சி. Direct Purchase Centre எல்லாம் தவிக்கிறதுஉண்மைதான். சாக்கு, லாரி கிடையாது. கோயில் மண்டபத்திலெல்லாம் நெல் மூட்டைதான் சாமியை மறைச்சிக்கிட்டு. இதுக்கு ஒரு மாத்துத் திட்டமிருக்கு. ஒவ்வொரு ஊர்லயும் வசதியான ஏஜண்டுங்க இருக்காங்க. அவங்க கிட்ட பெரிய கொடௌன்லாம் இருக்கு. வவ்வாப் பறக்குது. நேரடியா விவசாயிங்க கிட்டேர்ந்து அரசு நெல் வாங்கறதுக்குப் பதிலா இந்த ஏஜண்டுங்க மூலமா வாங்கலாம். மூட்டைக்கு இத்தனை ரூவான்னு கவர்மெண்டே ரேட் ஃபிக்ஸ் பண்ணலாம். விவசாயியெல்லாம் இப்படி பத்து மூட்டையைப் போட நாள் கணக்காக் காத்திருக்க வேண்டியதில்லை. அதுவுமில்லாமல் இந்தத் திட்டத்துக்குப் பப்ளிசிடி போதாது. கவர்மெண்ட்ல மொபைல் வான் கொடுக்கறாங்கங்கற விஷயம் பாதிப் பேருக்குத்தெரியாது. அதனாலே விவசாயிங்களே வண்டி கட்டிக்கிட்டு வராங்க. குறுவை அறுப்பை விக்கறதுக்கு அவசரப்படுவாங்க. எந்த நேரமும் மழை வந்துடும்கிற பயம் அவங்களுக்கு. அதனால அவங்ககிட்டேர்ந்து உடனே கொள்முதல் பண்ணிக்கிறதுக்கு இன்னும் நெறைய ஆட்களைப் போடணும். ஹெட் குவார்ட்டர்ஸ் மட்டுமில்லாம ஒவ்வொரு ஊர்லயும் கோடௌன் கட்டணும். அறுபடைக்கு ஒரு மாசம் முன்னாடியிலிருந்தே ரேடியோ, டி.வி. பேப்பர்னு எல்லாத்திலயும் ஏற்பாடுங்களைப் பத்திச் சொல்லணும். இந்தத் திட்டத்தோட ஒவ்வொரு சலுகையையும் விவசாயிங்க புரிஞ்சுக்கணும். இன்னின்னாரு தான் உங்க ஏஜெண்டுன்னு சொல்லணும். கவர்மெண்ட் இந்த மாதிரி ஒவ்வொரு ஊர்லயும் உள்ளூர் யாவாரியையேஏஜண்டா வச்சான்னா இந்தத் திட்டம் ரொம்ப நல்லாச் செயல்படும். என்னங்க நான் சொல்றது?'' என்று முடித்தார் அவர்.

**சுரேஷ்—பாலா**

புகைப்படம் நன்றி: **''ஹிந்து''**

# பெஸ்ட் ஆப் லக்

ஷைலஜா

பதினைந்து பக்கங்கள்!

நிரஞ்சனுக்கே ஆச்சர்யமாகி விட்டது!

ஒரு சின்னஞ்சிறிய 'தீம்' இத்தனை விரி வாய்ப் பரந்து பதினைந்து பக்கங்களுக்கு சுவாரஸ்யமான கதையாவது சாத்தியமா?

சாத்தியமாகாமலா எழுத உட்கார்ந்த ஒரு மணி நேரத்தில் கதையை முழுமையாய் முடிக்க முடிந்தது?

நிரஞ்சனுக்கு இன்னமும் வியப்பு மாளவில்லை. ஒரு முழுமையான த்ரில் மனத்தில் நிறைந்தது.

அருகில் இருந்தகுண்டூசி பெட்டியிலிருந்து ஒரு குண்டூசியை எடுத்தான்.

பதினைந்து பக்கங்களையும் சேர்த்துக் குண்டூசியால் இணைத்தான். நிமிர்ந்த போது, தான் எழுதி முடித்த கதையின் தலைப்பு கண்ணில் பட்டது.

'உள்ளம் நிறைந்தது.'

நிரஞ்சனின் உள்ளமும் நிறைந்துதான் போனது!

எத்தனை நாள் வேட்கை இது! 'நம்மால் முடியுமா?' என்கிற தாழ்வு மனப்பான்மை நேற்று வரை தடை போட்டுக் கொண்டு தான் இருந்தது. இன்றைக்கு வந்த துணிச்சலில்...

''நிரஞ்சனு! மாடியில அப்பா ரூமில் உட்கார்ந்து என்ன பண்றே? காலேஜுக்கு நேரமாகலே?''

கீழிருந்து வெங்காய சாம்பாரின் மணத்தோடு அம்மாவின் குரல் மாடிக்கு எழும்பி உசுப்பியது.

''இதோ... வரேம்மா...'' என்றபடி கதையைக் கவரில் போட்டான்.

''அப்பாக்குப் பிள்ளை தப்பாமப் பிறந்திருக்கான். வீட்டுப் பொறுப்பே கிடையாது... வந்து தொலையேண்டா...''

நிரஞ்சன் கவரோடு 'தடதட'வென மாடிப்படி அதிர கீழே இறங்கி வந்தான்.

''என்ன கவர்? கதையா?''என்று எதிரில் வந்த தங்கை வசுதா கேட்பாள்என

எதிர்பார்த்தான். அவன் வழக்கமான அலட்சியத்துடன் கையில் 'சேஸ்' கனக்க, சாப்பிட உள்ளே போனான்.

நிரஞ்சன் வேகமாய்ச் சாப்பிட உட்கார்ந்தான்.

''அம்மா! வசுதா, சம்பத்... நீங்களும் கேளுங்கோ... நா... நான் வந்து ஒரு கதை எழுதி இருக்கேன்...''

''நீ... நீயா? உனக்கேண்டா நிரஞ்சன் இதெல்லாம்? வீட்டில் அப்பா ஒருத்தர் எழுதறது போறாதா?'' என்றாள் வசுதா.

''ஆமாண்டா. நீ கதை எழுதற விஷயம் ஊருக்குப் போயிருக்கற நம்ப அப்பாக்குத் தெரிஞ்சா உன் தோலை உறிச்சிடுவார்... 'பி. எஸ். ஸிய ஒழுங்காப் படிச்சிக்கிழி... அப்புறம் கதை எழுதிக்கலாம்' பார் ''என்றான் சம்பத் பயப்படுவது போல.

நிரஞ்சன் துளி நம்பிக்கையுடன் அம்மாவை நிமிர்ந்து பார்த்தான். பாக்கியம் 'சர் சர்' எனத் தயிரை மத்தால் சிலுப்பியபடி ''நிரஞ்சன்! அப்பா ஊர்ல இல்லாத சமயம் உனக்கேண்டா இந்த அதிகப்பிரசங்கித்தனம்? கதையாம் கதை! தூக்கிப் போடு குப்பை!'' என்றான்.

நிரஞ்சனுக்குச் சட்டென துக்கத்தோடு கோபமும் புறப்பட்டது...

சே...: வீட்டில் ஒருத்தருக்குமே இலக்கிய ரசனை கிடையாது! ஆனானப்பட்ட அப்பா, பிரபல எழுத்தாளர் சக்ரவர்த்தி எழுதிய கதைகளையே அம்மா சீண்டியதில்லை. 'பாருடி பாக்கியம்! என் கதை வந்திருக்கு!' என்று அப்பா ஆவலாய்த் தம் கதை பிரசுரமான பத்திரிகையை நீட்டுவார். அதைத்தொட்டுக் கூடப் பார்க்காமல், 'இதுக்குப் பணம் எத்தனை அனுப்புவான்?' என்பாள் அம்மா.

நிரஞ்சனுக்குச் சாப்பாடே பிடிக்கவில்லை.

நிரஞ்சன் ஸ்டாம்பு ஒட்டிய கவரைக் கண்ணில் ஒற்றிக் கொண்டு மானசீகமாய்க் கடவுளிடம் வேண்டியபடி தபால் பெட்டியில் சேர்த்தான்.

ஒரு மாதம் சென்று...

அன்று கல்லூரி விட்டு வரும்போது தற்செயலாய் ஆர்தப் புத்தகக் கடைப்பக்கம் திரும்பினான். அந்த பிரபல வாரப் பத்திரிகையின் அட்டைப் படச் சித்திரங்களே அவனுக்குப் பரிச்சயமானதாய்த் தோன்றவே ஆர்வத்தோடு பத்திரிகையை வாங்கிப் பிரித்தான்.

'உள்ளம் நிறைந்தது!'

அட்டைப்படச் சிறப்புக்கதை!

நிரஞ்சன் கடைக்காரனுக்குச் சில்லறை கொடுக்கக் கூட மறந்து அச்சில மின்னும் தன் எழுத்தில் பரவசப்பட்டு நின்றான்.

பத்தே நிமிஷத்தில் நிரஞ்சன், தன் தமிழாசிரியர் ரங்கராஜன் வீட்டு வாசலுக்கு வந்து விட்டான். யோசித்தபடி தன் செருப்பை நிரஞ்சன் உதறியபோது உள்ளிருந்து பேச்சுக்குரல் வந்தது.

'ஸார்! நம்ம நிரஞ்சன் எழுதின கதை இந்த வார 'கதவு' வார இதழில் அட்டைப் படச் சிறப்புக் கதையாய் அட்டகாசமாய் வந்திருக்கு'' என்றான்ஒரு பையன்.

நிரஞ்சனுக்கு இப்போது தான் குறுகுறுப்பானது. ரங்கராஜனின் பதிலைக் கேட்கக் காதைத் தீட்டிக் கொண்டான்.

''ம்... ம்... காலையிலேயே படிச்சேன்...'' என்றார் ரங்கராஜன்.

குரல் அத்தனை சுரத்தாய் இல்லாததாய் நிரஞ்சனுக்குத் தோன்றியது.

அதற்குள் வேறொரு பையன், ''ரொம்பப் பிரமாதமாய் இருக்கு, ஸார், சாதுவான நம் நிரஞ்சனா இப்படி ஒரு புரட்சிகரமான கதை எழுதி இருக்கிறான்!'' என்று பிரமித்துப் போனான்.

''என்னால கூட நம்ப முடியலை... நிச்சயமாய் இந்தக் கதையை நிரஞ்சன் தான் எழுதி இருப்பான்னு என்னால நம்ப முடியலை... அவன் அப்பா, பிரபல எழுத்தாளர் சக்ரவர்த்தி. அவர்தான் பிள்ளை பேரில் இந்தக் கதையை எழுதி அனுப்பி இருக்கணும்! ஏனென்றால் இந்தக் கதையில் பல இடத்தில் அவர் 'டச்' இருக்கது...''

ரங்கராஜன் இப்படிச் சொல்லி முடித்ததும் வெளியே நின்று இத்தனையும் கேட்டு விட்ட நிரஞ்சனுக்குப் புசுபுசுத்துப் பூரித்திருந்த உற்சாகமெல்லாம் விரல் அழுத்தலில் சுருங்கிப் போன பஞ்சுமிட்டாய் போல அமுங்கிப் போனது.

முன்பு ஒரு சமயம் நண்பன் ராகுல் சொன்னது ஏனோ இப்போது நினைவிற்கு வந்தது. ''நிரஞ்சன்! ஒரு பிரபல எழுத்தாளரின் பிள்ளையா நீ? ரொம்ப அதிர்ஷ்டசாலிப்பா!''

''இல்லை ராகுல்! அதனால் தான் இப்போ துரதிர்ஷ்டசாலியாகி விட்டேன்!''

மனதிற்குள் முணுமுணுத்தபடி திரும்பவும் வெளியே வந்தான்.

''நிரஞ்சன்!''

பாதி தூரம் நடந்ததும் பக்கத்தில் பரிவாய் ஒரு குரல் கேட்கவே திரும்பினான்.

அப்பா! எழுத்தாளர் சக்ரவர்த்தி!

இரண்டு கையிலும் சூட்கேஸ்கள். முகத்தில் பிரயாணக் களைப்பு. அதனூடேயே ஒரு ஜொலிப்பு.

சூட்கேஸைக் கீழே வைத்துவிட்டு, ''வெல் டன் மை டியர் பாய்!'' என்று நிரஞ்சனின் முதுகில் தட்டினார். பிறகு சொன்னார்: ''ரயில்வே ஸ்டேஷனில் 'கதவு' வாங்கி உடனே உன் கதையைப் படித்தேன். முதல் கதையே முத்தான கதை! நிரஞ்சன்! இந்தத் திறமையும், எழுதும் பாங்கும் அமோகமாய் உயர்வதற்கு வாழ்த்துக்கள்!''

''ஆனால்... ஆனால்... அப்பா... உன்மையை உணராத இந்த எதிர்ப்பு நிறைந்த உலகத்தில்...?'' தழுதழுத்தபடி நிரஞ்சன், சற்றுமுன் ரங்கராஜன் பேசியதைச் சொல்லி முடித்தான்.

''நிரஞ்சன்! ஒன்றைப் புரிந்துகொள்! எழுத்தாளர்களை விட வாசகர்களுக்குக் கற்பனை அதிகம். இதில் எதிர்நீச்சல் போட்டு முன்னேறுவதுதான் உன் சாமர்த்தியம்! பெஸ்ட் ஆஃப் லக் மை டியர், ஸன்!''

சக்ரவர்த்தி சூட்கேஸ்களோடு திரும்பி, கம்பீரமாய், நடக்க, அந்தப் பிரபல எழுத்தாளரைப் பின் தொடர்ந்தான் நிரஞ்சன். இப்போது அவன் நடை நிமிர்ந்து விட்டது!





நன்றி. நன்றி.





எனக்குள் ஒருவன்

○ பாத்மா கோபாலன், திருச்சி.

? ராஜாஜி காலமான போது இந்திரா வரவில்லை அஞ்சலி செலுத்த என்பதைக் குறிப்பிட்ட நீங்கள் நேருஜி காலமான போது ராஜாஜி போகவில்லை என்பதை மட்டும் மறந்து விட்டீரே?

! அரசாங்கத்தில் உயர் பதவிகளில் இருந்தோருக்கும் இருப்போருக்கும் Protocol என்பதாக ஒன்று உண்டு. அதைப் புரிந்து கொண்டால் உங்கள் கேள்விக்கே இடமில்லை. நேரு குடும்பத்தினிடம் ராஜாஜிக்கு அபாரமான பிரியமும் மதிப்பும் உண்டு.

○ ஏ. குருமார், காஞ்சிபுரம்.

? வோட்டுப் போடும் போது பிச்சைக்காரன் என்ன நினைத்துக் கொள்வான்?

! பிச்சை ப்போட நமக்கும் ஒரு வாய்ப்பு என்று.

○ வேணுகோபால், சென்னை—34.

? என்னவேய்! குற்றம் சொல்ல வந்து விட்டீரே! நல்லா இருக்கோணும் பாட்டில் இப்போதுள்ளதைப் போல் இரட்டை அர்த்தம் கூட இல்லையே?...

! இரட்டை இலை அர்த்தம் இருக்கிறதே, பாட்டு, காட்சி இரண்டிலும்.

○ த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? நீங்கள் தேர்தலில் போட்டியிட்டு ஜெயிப்பது போல் கனவு கண்டேன்!

! விழித்தெழுந்த பின் அடடா கனவாய்ப் போய்விட்டதே என்று வருந்தினீரா அல்லது நல்லவேளை கனவுதானே என்று சந்தோஷித்தீரோ. அதைக் கூறும்!

○ ஏ. ஆர். நஜீர், சின்னசேலம்.

? எதிர்க் கட்சிகளிடம் ஒற்றுமை காண முடியுமா?

! ஹூம். இன்னுமா அந்த நம்பிக்கை? என்ன பிரசாரம் பண்ணி என்ன பயன்? மூட நம்பிக்கைகள் ஒழியவே மாட்டேனென்கிறதே!

○ எஸ். தேவராஜு, வஞ்சூர்.

? தராசே பெண்களைக் கெடுப்பது சினிமாவா, பத்திரிகைகளா?

! இரண்டுமில்லை. நாமேதான் காரணம். சினிமாவோ பத்திரிகைகளோ நம்மைக் கெடுக்க நாம் ஏன் அனுமதிக்க வேண்டும்? அதுசரி, பெண்களை மட்டும் குறிப்பிட்டு எழுதியிருக்கிறீரே! கண்டன ஊர்வலம் வஞ்சூர் வரை வராது என்ற துணிச்சலா?

○ திருமதி தேவநாதன், மதுரை.

? மனிதப் பூண்டே இல்லாத தீவில் சில காலம் தங்க நேர்ந்தால் எந்தப் புத்தகத்தை எடுத்துச் செல்வீர்கள்?

! ஜூபிலி தமிழ்ப் பேரகராதி. காரணம். எந்தப் பக்கத்தை வேணுமானாலும் இப்படியும் அப்படியுமாய்ச் சோம்பலோடு புரட்டிப் படிக்கலாம். தூக்கம் வர உதவும். தூக்கம் வரும்போது தலையணையாகவும் உதவும். எனக்குத் தேவையான சரியான உயரம் கிட்டும். தூக்கம் வராத போது இங்கொன்றும் அங்கொன்றுமாய்ப் படிக்க ரசமாகவும் இருக்கும்.

○ ஜி. ராமமூர்த்தி, அரசவனங்காடு.

? மதர்ஸாக்களிலும் கான்வெண்டுகளிலும் பாடத்திட்டத்தோடு கிறிஸ்துவ இஸ்லாமிய மதங்களின் உயர் நோக்கங்கள் சொல்லித் தரப்படுவது போல சமய சார்பற்ற கொள்கையைக் கடைப்பிடிக்கும் நமது அரசு திருக்குறள், கீதை மற்றும் ராமாயண மகாபாரதக்கதைகளை வாரம் ஒரு முறை பள்ளிகளில் கற்பித்தால் என்ன?

! ஊஹும். கூடாது கூடாது. மதச் சார்பற்ற கொள்கை என்றால் இந்து மதத்தை மட்டும் புறக்கணிப்பது என்று இவர்கள்



அமெரிக்காவுக்குக் கலைஞரை அனுப்பலாமா?

## நீங்கள் கேட்டவை

## தராசு

அகராதியில் அர்த்தம் எழுதி வைத்துக் கொண்டிருக்கிறீர்களே, அது என்ன ஆவது?

○ பி. டி. சண்முகராஜ், பல்லாவரம்.
? நாம் ஏன் இன்னும் ஏழை நாடாகவே இருக்கிறோம்?
! அரசியல்வாதிகளுக்கு அதில் ஆதாயம் இருப்பதால். நவீன பொருளாதாரக் கொள்கைகளை ஏற்காததற்கு இதுவே காரணம்.

○ ஆர். அப்துல்சலாம், திருச்சி.
? பொதுத் தேர்தல் முடிந்த பிறகாவது பஞ்சாயத்து தேர்தல்கள் நடைபெறுமா?
! சின்னசேலம் ஏ. ஆர். நசீருக்கு அளித்துள்ள விடை காண்க.

○ கு. வை. ஈசுவரன், நெய்வேலி.
? தேசியக் கட்சிகளிடம் காணப்படும் குறைகளை நீக்க முயலாமல் பிராந்தியக் கட்சிகளின் கூட்டணிகள் உருவாகி தேசிய ஒருமைப்பாடு குறைய ராஜாஜி அவர்களே காரணம் என்பது என் குற்றச்சாட்டு. தங்கள் பதில்?
! தேசியக் கட்சியான காங்கிரஸிடம் இருக்க குறைபாடுகளை — அதன் கொள்கைகள் நாட்டுக்கு நலன் பயக்கவில்லை என்பதை—ராஜாஜியை விட வன்மையாக எடுத்துக் காட்டியவர் கிடையாது. தேசியக் கட்சியான காங்கிரஸின் செல்வாக்கு குறைந்ததற்கும், குறைந்து வருவதற்கும் அக்கட்சியேதான் காரணம். ராஜாஜி அல்ல. ராஜாஜியின் அறிவுரைகளை ஏற்றிருந்தால் அது தேசமெங்கும் பெரும் புகழுடனும் செல்வாக்குடனும் இன்றும் கொடி கட்டிப் பறக்கும். பிராந்தியக் கட்சிகளின் வளர்ச்சிக்கும் காங்கிரஸ் தடம் மாறிப் போனதே காரணம். அதன் தவறான பல கொள்கைகளும் ஊட்டூசல்களும் அதன் செல்வாக்கைக் குறைக்கக் குறைக்க பிராந்தியக் கட்சிகள் பலம் பெற்று வளர்ந்தன. இந்த வளர்ச்சியைத் தடுத்து நிறுத்த முடியாது என்ற நிலையில் அக்குப் பிராந்தியக் கட்சிகளையும் தேசிய உணர்வோடு ஒன்றி இருக்கச் செய்தவர் ராஜாஜியே. இதற்காக தேசிய ஒருமைப்பாட்டினை மதிக்கும் ஒவ்வொருவரும் ராஜாஜிக்கு நன்றி செலுத்த வேண்டும்.

○ ஜெ. முகமது பாரூக், நெல்லிக்குப்பம்.
? நல்லவனுக்கு நல்லவன் இளையராஜா. எனக்குள் ஒருவன் இளையராஜா தங்களைக் கவர்ந்தவர் யார்?
! நல்லவனுக்கு நல்லவன் இளையராஜாவே எனக்குள் ஒருவன்.

○ கே. முத்துக்கனி, கள்ளக்குறிச்சி.
? முதல்வர் நன்றாகி விட்டார், பேசுகிறார், சிரிக்கிறார் என்று செய்தி வருகிறதே தவிர அவர் புகைப்படம் ஒன்று கூட வந்த பாட்டைக் காணோமே?!
! அதானே!?

○ எம். வடுகநாதன், வேதாரண்யம். ★
? ஆந்திர சட்டசபைக் கலைப்பு பற்றி?
! என். டி. ஆர். எடுத்த மிக மோசமான முடிவு. நாடாளு மன்றத் தேர்தலில் தெ.தே. வெற்றி பெற்றிருந்தால் கவலையே இல்லை. தோல்வி கண்டாலும் இவருக்கு ஆபத்தில்லை. ஒருவேளை மக்கள் தெ.தே.யை ஆதரிக்கவில்லை என்பதாகக் கூறி அமைச்சரவை டிஸ்மிஸ் செய்யப்படலாம். அப்படி நடந்தால் இவர் பக்கம் அனுதாப அலை பொங்கி யிருக்கும். சட்ட மன்றத் தேர்தல் நடக்கும்போது அமோக வெற்றி கிட்டியிருக்கும்... இப்போ... எதற்காகக் கலைத்தார்?... வீண் செலவு... மார்ச் மாதம் வரை தேர்தலை ஒத்திப்போடு-வானேன்? என்பது போன்ற பல விமர்சனங்களுக்கு அவர் பதில் கூற வேண்டியிருக்கிறது.

○ அ. அன்பழகன், அந்தணப்பேட்டை.
? மாநிலத்துக்காக உழைத்து விட்டேன், இனி தேசியப்பணி ஆற்றப் போகிறேன் என்கிறாரே குழந்தைவேலு?...
! மாநில அளவில் ஜோக் அடித்து அவருக்கு அலுத்து விட்டது. தேசிய அளவில் ஜோக் அடித்திருக்கிறார்.

○ என். செல்வராஜ், கரூர்.
? அமெரிக்கா சென்று எம். ஜி. ஆர். உடல் நிலையைப் பார்த்து விட்டு அறிக்கை விடுகிறேன் என்கிறாரே கருணாநிதி அனுப்பலாமா?
! போய்ப் பார்க்க இவர் தயார். அனுப்ப நாம் தயார். பார்க்க அனுமதிக்க ''அவர்கள்'' தயாரா?

○ எம். கலியமூர்த்தி, திருச்சி.
? குதிரைகள் திருட்டுப் போன பிறகு லாயத்தை இழுத்துப் பெரிய பூட்டுப் போட்டுப் பூட்டுவது பற்றி...?
! வேறு புதிய குதிரைகள் வந்திருக்கும் போது மறுமுறையும் ஏமாந்துவிடக் கூடாதல்லவா?

○ பா. கிருஷ்ணதாஸ், கும்பகோணம்.
? அஸ்திக்கும் ஆஸ்திக்கும் உள்ள தொடர்பு என்ன?
! அ.வை வைத்து ஆ. பண்ணுவது இ. காரர்களுக்குக் கைவந்த கலை.

○ பத்மினி சுரேஷ், கோவை.
? தங்களுக்குப் போதை தருவது எது?
! நான் சேகரித்து வைத்துள்ள கர்நாடக சங்கீத மேதைகளின் டேப் இசை.

○ டி. எஸ். ரெட்டி, வேலிநெட்டி.
? பவர் கட்டைக் கண்டுபிடித்தவர்கள் இந்தியர்கள்தானே?
! ஆமாமாம், ஜனநாயகம், தேர்தல் என்றெல்லாம் சொல்லிக் கொண்டே மக்களின் பவரை யெல்லாம் கட் பண்ணியவர்கள் இந்தியர்களைத் தவிர உலகில் வேறு யாருமில்லை.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
எம். வடுகநாதன்,
டி. டி. பி. ரோடு,
வேதாரண்யம் 614 810.

# உங்கள் குழந்தைக்கு

## வயிற்றுப் போக்கு வந்தால்



உப்பு-சர்க்கரை கலந்த நீரை அடிக்கடி கொடுங்கள்



தாய்ப்பாலை தொடர்ந்து கொடுங்கள்



உண்ணும் உணவை நிறுத்தாமல் கொடுங்கள்

## வயிற்றுப்போக்கு உண்டாகக் காரணங்கள்

- அசுத்தமான சுற்றுச் சூழ்நிலை
- சுகாதாரமற்ற பழக்க வழக்கங்கள்
- அசுத்தமான குடிநீர்
- ஈ மொய்த்த பண்டங்கள்
- ஊட்டச்சத்துக் குறைவு

குழந்தைக்கு வயிற்றுப் போக்கு வந்தால் மந்திரித்து தாயத்து கட்டினால் மட்டும் போதாது. இங்கே குறிப்பிட்ட வைகளையும் செயல் படுத்துங்கள்.

தொடர்பு பிரிவு
தமிழ்நாடு ஒருங்கிணைந்த் ஊட்டச் சத்துத் திட்டம்,
சென்னை-18.

DIPR-216 84 EP



## நான் விரும்பும் வேட்பாளர்

# சொலல் வல்லன்: சோர்விலான்: அஞ்சான்!!

சுதந்திரத்துக்குப் பின் எங்கள் பட்டுக்கோட்டைத் தொகுதியைச் சேர்ந்தவர்கள் (வெவ்வேறு தொகுதிகளில் போட்டியிட்டு) மத்திய — மாநில அமைச்சரவைகளில் தொடர்ந்து அங்கம் வகித்து வந்தும் எங்கள் தொகுதி எந்தவிதமான சுபிட்சத்தையும் காணவில்லை.

ஆனால் 1980ம் ஆண்டு சட்ட மன்றத் தேர்தலில் எங்கள் தொகுதி உறுப்பினராக எஸ்.டி. சோமசுந்தரம் தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னர் பல முன்னேற்றங்களைக் கண்டிருக்கிறோம்.

தொகுதிக்கு அவர் எவ்வளவோ செய்ய நினைத்தாலும் அங்கிங்கென்னாது எங்கும் நிறைந்துள்ள உட்கட்சித் தகராறு, கோஷ்டிப் பூசல்கள் காரணமாகப் பல முட்டுக்கட்டைகள்.

இருப்பினும் 'சொலல் வல்லன் சோர்விலான் அஞ்சான்' என்பதற்கிணங்க அவர் அந்த முட்டுக்கட்டைகளையெல்லாம் தகர்த்தெறிந்து பட்டுக்கோட்டையில் 'பாலிடெக்னிக்சங்கம்' என்ற ஓர் அமைப்பின் கீழ் கடந்த ஆண்டு தொழில்நுட்பக் கல்வி நிலையம் ஒன்றைத் தொடங்கினார்.

எஸ். டி. எஸ். அமைச்சரானார்; ஏதோ செய்தார் என்பதல்ல. அவர் அமைச்சராக இருந்தாலும் கஷ்டப்பட்டுப் போராடித்தான் தொகுதிக்கு அரசியல் வேறுபாடின்றிச் செய்தார்.

மேலும் அவருடைய அயராத முயற்சியினால் ரூ. 50 லட்சம் செலவில் அரசு அலுவலக (18 அலுவலகங்கள் கொண்ட காம்ப்ளக்ஸ்) கட்டிடங்களும், ரூ. 44 லட்சம் மதிப்பீட்டில் பேருந்து நிலையமும் ரூ. 1.25 கோடியில் கழிவுநீர் வடிகால், மற்றும் சாலை அகலப்படுத்தும் திட்டமும், ரூ. 5 லட்சம் திட்டத்தில் ஆதி திராவிடர் மாணவர் விடுதியும் மற்றும் தொழு நோய் மருத்துவமனை (ரூ. 3 லட்சம்) கால்நடை மருத்துவ அதிகாரி குடியிருப்பு (ரூ. 2 லட்சம்) பொது நூலகம் (ரூ. 3.60 லட்சம்) பால் குளிரூட்டும் நிலையம் (ரூ. 20 லட்சம்) ஆகியன பட்டுக்கோட்டையிலும் ரூ. 20 லட்சம் செலவில் குடிநீர்த் திட்டம் அதிராம்பட்டினத்திலும் கொண்டுவந்து முடியும் தறுவாயில் உள்ளன.

மேலும் பட்டுக்கோட்டைத் தொகுதியில் ரூபாய் ஒரு கோடி மதிப்பீட்டில் கிராமப்புற இணைப்புச் சாலைகள் போடவும் பல்வேறு வளர்ச்சித் திட்டங்களும் அனுமதிக்கப்பட்டு, வேலைகள் நடந்து வருகின்றன.

பட்டுக்கோட்டை தொகுதியில் சர்க்கரை ஆலையும், காகிதத் தொழிற்சாலையும். கொண்டு வர வேண்டும் என்பது இவரது கனவு. பட்டுக்கோட்டை நகராட்சி அலுவலகம் கட்ட நிலமும் வாங்கி தி. மு. க. ஆட்சி காலத்திலேயே அடிக்கல்லும் நாட்டப்பட்டு முயற்சிகள் ஏதும் எடுக்கப்படாமல் இருக்கிறது. மதுக்கூர் பேருந்து நிலையமும் அடிக்கல் நாட்டியதோடு சரி.

இந்நிலையில் வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைந்த கதையாகி விடக்கூடாது. எனவே எங்கள் தொகுதியைப் பொறுத்தவரையில் எஸ். டி. சோமசுந்தரம் மீண்டும் ஓர் ஐந்தாண்டுகளுக்கு எம்.எல். ஏ. ஆக இருப்பதையே நான் விரும்புகிறேன்.

பட்டுக்கோட்டை

ஞான தங்கபாரதி



## நான் விரும்பும் வேட்பாளர்

# வாய்மை நிலைக்க வாதாடியவர்



கன்னியாகுமரி மாவட்டத்தில் குளச்சல் சட்டமன்ற வாக்காளன் நான். வருகின்ற தேர்தலில் எங்கள் தொகுதியில் தக்கலை ஊராட்சி ஒன்றியத்தில் பெருந் தலைவராகப் பணி புரிந்த 'இரணியல் ரவி' போட்டியிட்டு வெற்றி பெற வேண்டும் என நாங்கள் பெரிதும் விரும்புகிறோம். குமரி மாவட்டத்தின் பல்வேறு தொகுதிகளில் இருக்கும் வாக்காளர்களிடமும் இந்த எண்ணம் உண்டு.

திரு இரணியல் ரவி திராவிட முன்னேற்றக்-கழக இயக்கத்தைச் சார்ந்தவர். எனக்கும் அந்த இயக்கக் கொள்கைகளுக்கும் அவ்வளவாகப் பொருந்தாது. திங்கள் கிழமை மார்த்தாண்டேஸ்வரம் கோவிலுக்கும், வெள்ளிக் கிழமை தோறும் வெள்ளி மலை முருகன் சன்னிதிக்கும் தினசரி மாலையில் ராதா கிருஷ்ணன் கோவிலுக்கும் செல்லவில்லை யென்றால், எனக்குத் தூக்கம் வராது! ஆனால் திரு இரணியல் ரவி இதற்கு நேரெதிரிடையாக இருந்தும் நான் அவரை விரும்புகிறேன்.

காரணம் உண்டு.

மாணவர் பருவத்தில் இருந்தே அரசியலில் தீவிர ஈடுபாடு கொண்டவர். நல்லதொரு எழுத்தாளர். தன்னலம் கருதாதவர்.. திருச்செந்தூர் கோவில் அதிகாரி கொலை வழக்கில் பால் கமிஷன் முன்னிலையில் உண்மைக்காக வாதாடி உண்மையை வெளிக் கொணர அரும் பாடு பட்டவர். சிறந்த வழக்கறிஞர் எனப் பெயர் ஈட்டியவர்.

1970ம் ஆண்டு முதல் ஏழரை ஆண்டுகள் தக்கலை ஊராட்சி ஒன்றியத்தின் பெருந் தலைவராகப் பணி புரிந்த நேரத்தில் இன. மத பாகுபாடின்றி கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்டு பொது நலனை மட்டும் கருத்தில் கொண்டு அவர் ஆற்றிய பணிகளை மறப்பதற்கில்லை. ஊராட்சி ஒன்றியம் என்றால் இதுவல்லவோ ஊராட்சி ஒன்றியம் என்று வியந்து போற்றப்படும் அளவில் அவர் பணிகள் சிறந்தன.

'ஊட்டச் சத்துணவுத் திட்டத்தைச் சிறப்பாகச் செயல்படுத்திய ஊராட்சி ஒன்றியப் பெருந் தலைவர் இவர். என்று மணிப்பூர் மாநில அரசும் UNICEF நிறுவனமும் பாராட்டும் அளவுக்குப் பணி புரிந்தவர் இரணியல் ரவி.

அந்த இரணியல் ரவி பத்மனாபபுர சட்ட மன்றத் தொகுதியைச்சார்ந்தவராக இருந்த போதிலும் எங்கள் குளச்சல் தொகுதி சட்ட மன்றஉறுப்பினராகத்தேர்வு செய்யப்பட வேண்டும் என நான் விரும்புகிறேன்.

இரணியல் ம. குமார்


இன்றிரவு டிசம்பர் 6ல 9-30க்கு

கமலஹாசன்

விவிதபாரதி சென்னை, திருச்சி வானொலி ஒலிபரப்பு



கல்கி வழங்கும்

நேரம் நல்ல நேரம்

தயாரிப்பு: எஸ். வி. ரமணன் :: புகைப்படம்: உத்ரா

## அஞ்சலி

அண்மையில் காலமான ஒய். பி. சவான் பற்றி சென்னை மராத்தி சமாஜ் தலைவரான கே. பி. நௌலே சொல்கிறார்:



யஷ்வந்த்ராவ், — பல்வந்த்ராவ்–சவான் மகாராஷ்டிரா மாநிலம். சதாரா மாவட்டம், தேவ்ராஷ்ட்ரே கிராமத்தில், ஏழைமையான குடும்பத்தில் பிறந்தவர். நாலு வயதிற்குள் தந்தையை இழந்து விட்டதால் இவரை வளர்த்தவர்கள் தாயும் அண்ணனும்தான்.

பள்ளியில் படிக்கும்போது ஆசிரியர் ஒரு நாள் ''நீங்கள் யாராக வர ஆசைப்படுகிறீர்கள்?'' என்று கேட்டபோது, மற்ற

# சென்னைக்குச் சவான் என்ன செய்தார்?



✻ நௌலே

மாணவர்கள், சிவாஜி, திலகர் என்றெல்லாம் சொல்ல, சவான் சொன்னாராம் ''யஷ்வந்த் சவான் ஆகவே விரும்புகிறேன்!''

காங்கிரஸில் முதலில் அண்டர் கிரவுண்ட் வேலைகளில் ஈடுபட்டு ஆங்கிலேயருக்குத் தொல்லைகள் தந்தவர். பல வருடங்கள் சிறையில் கழித்தவர். சிறையில் இருக்கும்போது, வெளியிலிருந்து சிறைக்குள் இலக்கியப் புத்தகங்கள், புரட்சிப் பத்திரிகைகள் எல்லாம் வரவழைத்துப் படிப்பார். பல கவிதைகள் எழுதினார் அந்தச் சமயம்.

1960 வாக்கில், சென்னை வந்திருந்தபோது அவரைச் சந்திக்க வாய்ப்புக் கிடைத்தது. அப்போது அவர் மகாராஷ்டிரா முதல்வர். சென்னையின் அனைத்து மராத்திய சங்கங்களும் இணைந்து ஒரு வரவேற்பு அளிக்க, அதில் கலந்து கொண்ட சவான், ஒரு பெரிய தொகையை நன்கொடையாக அளிக்க, அதைக் கொண்டு ஒரு விருந்தினர் மாளிகை கட்டி, அது இன்றும் சிறப்பாக இயங்கி வருகிறது.

சவானுக்கு மற்ற மாநிலங்களில் வாழும் மராத்தியர்களின் நல்வாழ்வில் ரொம்ப சிரத்தை உண்டு. தமிழ் நாட்டில் அப்போது கே. கே. ஷா கவர்னர். சவான் டெல்லியில் வெளி விவகார மந்திரி. சென்னை மராத்தி சமாஜ் செயலாளராக இருந்த 'அப்டே' என்பவர் மகாராஷ்டிராவில் பணியாற்றியவர். அவருக்குப் பென்ஷன் வழங்கப்படுவதில் ஏக தாமதம் ஆயிற்று. அவர் சவான் வந்தபோது, பிரச்னையைச் சொன்னார். சவான் ஊருக்குத் திரும்பின சில நாட்களிலேயே பென்ஷன் பிரச்னை தீர்ந்தது.

சவான் ஒரு முறை விருப்பம் தெரிவித்ததன் விளைவே, சென்னையில் சத்ரபதி சிவாஜி கல்வி, கலாசாரக் கழகமும் சத்ரபதி சிவாஜி பள்ளிக்கூடமும் உருவாயின. மராட்டியர் அனைவரும் ஒரே குடும்பத்தினர் என்று நினைத்தவர் ஒய். பி. சவான்.

-மௌஷ்மி



"எனக்கும் எங்க அண்ணனுக்கும் யார் பெரிய வீடா கட்றதுங்கற போட்டி வந்து ஒருத்தர் கிட்ட காண்ட்ராக்ட் கொடுத்தோம் கடைசியில.....?"

"யார் வீடு பெரிசா இருந்துச்சி...?"

"காண்ட்ராக்டர் கட்டிக்கிட்ட வீடுதான்!"

–பாரதிரங்கன்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

## வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர். பற்சிதைவை எதிர்த்திடுவீர்.



# கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர் !

தவறாமல் கோல்கேட் உபயோகிப்பதால்,
உங்கள் குடும்பத்தினரின் பற்களுக்கு ஆரோக்கியம், வலிமை, புத்துணர்ச்சி
தரும் தூய சுவாசம் கிடைக்கிறது.
இதுவே கோல்கேட்டின் பாதுகாப்பு வளையம்.

நீங்கள் பல் துலக்கும் ஒவ்வொரு முறையும்
கோல்கேட்டின் சமபகமான ஃபார்முலா
செயல்படுவது எப்படி என்றால்...



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே
சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும்,
பற்சிதைவையும் உண்டாக்கும்
பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயல்புரியும்
நுரை ஆழ ஊடுருவிச் சென்று,
துர்நாற்றத்தை ஏற்படுத்தும் உணவுத்
துணுக்குகளையும் சிதைவு ஏற்படுத்தும்
பாக்டீரியாக்களையும் அகற்றுகிறது.



முறையாக கோல்கேட் கொண்டு பல்
துலக்குவதால் புத்துணர்ச்சி தரும்
தூய சுவாசமும், வலிமை மிகுந்த
ஆரோக்கியமும் தருகிறது.

ஒவ்வொரு முறையும் சாப்பிட்ட உடன்,
உங்கள் குடும்பத்தினர் தவறாமல் கோல்கேட்
கொண்டு பல் துலக்கட்டும்.
வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர்.
கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர்.




GK&E B84.55 Tam

கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும்
பெப்பர்மெண்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது !

M. 4392
in Sri Lanka
1/75

# "I'm the Fastest Moving Object at any Given Time!"

**Kimi says....**

"My idea of a good life is to keep on the move: Jogging, swimming, disco-dancing — I love it all! And you don't have to be a model to know that disco or sports wear can be designed as dramatically as you please.

**Squares stay on the hypotenuse:**

Geometry is the only place for squares! Throw away your inhibitions with these buckled trousers that balloon lightly at



your ankles, worn with this sandstone brown shirt. The sleeves and collar are fine white polyester cotton, a faint white stripe runs down the main brown fabric and the



KIMI KATKAR

buttons are concealed by a front pleat. Bad cases of "disco-fever" should dress cooler, in this fawn short-sleeved shirt, with netting across the chest, to really take the heat off you!



**Running in Circles**

Every breath you take on an early morning jog, refreshes you after your late night. Start right, with this powder-blue track suit with cream knitted fabric that gently hugs your ankles and wrists.



**Irresistible, magnetic field!**

Back at the disco for that special date, this one is a real Thriller : a burgundy shirt with off-white stitching on the yoke and pocket flaps, with a tunneled belt.

You're the centre of attraction, holding them spell-bound, not some other maniac on the floor!



What's the shortest distance between two points in your search for the ideal fabric? Start with Graviera. Disco and sports wear may look free and easy, but they have to be really tough to take the treatment handed out to them.

That means Graviera, with it's crease-free, wash 'n wear convenience and polyrich fast colour. Graviera, with it's all-weather durability, was made for all the seasons of the year: summer, monsoon and winter. Graviera makes sense not only rationally, but emotionally, too: when you reach for Graviera, you choose a luxury suiting famous all over India and well-known for it's high standards of excellence. It makes you look and feel your best.

You can't go wrong with Graviera."

Kimi Katkar

**People who Really know textiles, choose Graviera.**

GRAVIERA SUITING GR®

MAPP BTM-84-31